


மூன்று தலைமுறைகள்

தாய் தன் மகளுக்கு
வுட்வார்ட் வைத்தியனின்
கிரைப் வாட்டர் என்னும்
மருந்துத் திராவகம்
எப்படி குழந்தைக்கு சுகம்
தருகிறதென்று சொல்லுகிறாள்.

# WOODWARD'S
## GRIPE WATER

W. WOODWARD LTD., LONDON. ENGLAND

ஸ்ரீதேசமித்திரன்

வாரப்பதிப்பு

சுபானு ௵ ஆடி ௴ 23உ (8-8-'43)

# கடைசித் தவணை

இந்த இரண்டாவது மகா யுத்தம் ஆரம்பித்தாலும் ஆரம்பித்தது! அது முதல் இந்தியாவில் ஒவ்வொரு வருஷமும் ஆகஸ்ட் மாதத்தில் வைஸ்ராய் லின்லித்கோ பிரபு ஒவ்வொரு விசேஷத்தை உண்டு பண்ணி வந்திருக்கிறார். 1940-ம் வருஷத்திலே இதே 8-ந்தேதிதான் இந்தியாவுக்கு இதே வைஸ்ராயின் மூலம் பிரிட்டிஷ் சர்க்கார் யோசனை விடுத்தார்கள். அந்த துக்ககரமான படலத்தை இங்கு குறிப்பிட வேண்டியதில்லை. 1942-ம் வருஷம் இதே 8-ந் தேதிதான் பம்பாயில் காங்கிரஸ் தலைவர்களை சிறைப்படுத்த ஆக்ஞை பிறந்தது. தலைவர்கள் வெளியிலில்லை; மத்திய சட்டசபைக்கூட்டம் நடந்து வருகிறது. அதன் ஆயுள் காலம் எவ்வளவு முறை நீடிக்கப்பட்டதோ அதற்குக் கிட்டத் தட்டச் சரிசமமாக வைஸ்ராய் லின்லித்கோ பிரபுவின் தர்ம பரிபாலனகாலமும் நீடித்து வந்தது. இப்போது கடைசி முறையாக அவரது பதவிக் காலம் தீரவேண்டிய சமயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. எஞ்சி நிற்கும் மாதங்கள் இன்னும் இரண்டே தான். அதற்குள் அவருக்கு ஆகஸ்ட் மாதத்தின் ஞாபகம் வந்தாற்போலிருக்கிறது! சட்டசபைகளின் கூட்டத்தில் பேச ஏற்பாடாயிற்று. என்ன பேசினார்? என்று ஊன்றிக் கவனித்தால் ஏன் பேசினார் என்ற எண்ணந்தான் மேலிடும். இந்தியாவின் முன்னேற்ற விஷயத்தில் உள்ள சிரத்தையை பெரிதாக்கிக் காட்டமுற்பட்டார். வகுப்புத் தகராறுகளைத் தீர்த்து ஒன்றுபடுத்த அரும்பாடு பட்டதாகவும், ஆனால் தம்முயற்சி பலிக்காததற்கு சமூகத்தவர்தான் காரணம் என்றும் சாக்குச் சொல்லுகிறார் அவர் இந்தப் பதிலைத் தேடித் தெரிவிப்பதற்கு அவசியமே கிடையாது. இந்தியாவுக்கு நியாயம் வழங்கத் தடையாகவிருப்பது சமூகங்கள் என்று இதற்குமுன் கூறி வந்திருக்கும் நிரந்தரமான சமாதானத்தில் மேற்சொன்ன பதிலும் ஓர் பிரிவுதான். ஆனால் இதை ஏன் சொல்ல வேண்டும்? இந்தியர்கள் இது கேட்டு ஆறுதலடையப் போவதில்லையென்பதும் தெளிவு. ஆனால் தம் ஊருக்குப் பதில் சொல்ல வேண்டும் என்பது ஒன்று; தன் மனத்தையே தேற்றிக் கொள்ள வேண்டுமென்பது மற்றொன்று. தமது ஆட்சிக் காலத்திலே வைஸ்ராயாக விருந்து இந்தியா கண்டதென்னவென்ற கேள்வி அவருக்குப் பிறகுமானால் 'கசப்பு' என்பது தான் ஒரே பதில். இதற்கு இன்றுள்ள இந்திய அரசியல் நிலைமையே போதிய பிரமாணம். சரித்திரத்திலேயே நிலையான பெயரைத் தேடிக்கொள்ளும் சந்தர்ப்பங்கள் லின்லித்கோ பிரபுவுக்கு நிறையக் கிடைத்தன. பிடிவாதம், பிறர் சொல்லை மதியாதிருந்தது இவைகாரணமாக வாய்த்த சந்தர்ப்பங்களையெல்லாம் உதறித் தள்ளிவிட்டார்.

'எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு' என்று முழக்கி வருகையில் இங்கு அதை மறுத்து மடக்கி வைப்பது அசட்டுத்தனம். காங்கிரஸைப் பற்றியோ, காந்திஜியைப் பற்றியோ லின்லித்கோ பிரபு தமது பிரசங்கத்தில் ஒரு வார்த்தைக் கூடச் சொல்லவில்லை. சொன்னாலும், சொல்லாவிட்டாலும் அந்த ஸ்தாபனத்தின் புகழ் மங்கப்போவதில்லை. ஒடுக்கிய சக்தியின் வேகம் ஓங்கிப் பரவுமேயன்றி உண்மையில் ஒடுங்கிப் போய் விடாது. லின்லித்கோ பிரபுவின் ஆட்சிக்காலத்திலேயே தமது தகுதியின்மையை நிரூபித்திருக்கையில் விலகும் காலத்தில் யாரும் அவரிடமிருந்து எதையும் உருவாக எதிர் பார்த்திருக்க மாட்டார்கள். ஆனால் கடைசியாக ஏதாவது சொல்வாரோ என்ற சபலத்துடனிருந்தவர்களுக்கு சலிப்பையே ஊட்டியது அவரது பிரசங்கம். 1943-ல் ஆகஸ்ட் மாதத்தில் அவர் கடைசியாகச் செலுத்திய தவணை இதுதான்! எல்லாருக்கும் நன்றி தெரிவித்துப் பேசியிருக்கிறார். ஆனால் 7½ வருஷ காலத்திற்குப் பிறகாவது அவருக்கு ஓய்வு கிடைத்ததே என்று அனைவரும் அவருக்கும், பிரிட்டிஷ் சர்க்காருக்கும் நன்றி செலுத்துவதுதான் முறை.

# சென்ற வார நிகழ்ச்சிகள்

## பாதுகாப்பு சட்ட அமுல்: மத்திய சட்டசபையில் பதில்

சென்றவாரம் மத்ய சட்டசபையின் கேள்வி நேரத்தின் போது, யுத்தம் ஆரம்பமானதிலிருந்து, 1943, ஜூன் மாதம் 1-ந் தேதிவரை பாதுகாப்புச் சட்டத்தின் 26-வது விதிப்படி 17,766 பேர் காவலில் வைக்கப்பட்டதாகவும், அவற்றுள் இன்னும் 11,717 பேர் காவலிலிருந்து வருவதாகவும் அதே காலத்திற்குள் 75,941 பேர் அவ்விதிகளின் படி தண்டிக்கப்பட்டிருப்பதாகவும் 1-ந் தேதி வரை சிறையில் இருப்பவர் 15,099 பேர்களென்றும், இதில் வட மேற்கு எல்லைப்புற மாகாணம் விவரங் கிடைக்காததால் சேர்க்கப்படவில்லையென்றும் ஸ்ரீ பூட்டே கேள்விக்கு உள்நாட்டு மெம்பர் பதில் அளித்தார்.

ஹாயிபிஷர் [illegible] வியாசங்களும் பிரசங்கங்களும் இந்தியாவில் தடுக்கப்பட்டதேன் என்று கேட்கப்பட்டதற்கு அவற்றில் இந்தியாபற்றி பட்சபாதமும், தவறானதுமான விஷயங்கள் அடங்கியிருந்ததுடன் அவை சர்க்கார் மீது அதிருப்தியும் நேசதேசங்களின ஒற்றுமைக்குப் பாதகமும் விளைக்கக்கூடியவையாயும் இருந்தது என அவர் குறிப்பிட்டார்.

* * * *

## ஸ்ரீ வத்ஸவா-சுப்பராயன் சந்திப்பு

ஸ்ரீ கோபிநாத் ஸ்ரீவத்ஸவா டாக்டர் பி. சுப்பராயனைச் சந்தித்துப் பேசினார். நடந்த சம்பவங்களையும் தற்போதைய ராஜீய நிலைமையையும் பற்றி யோசிப்பதற்காகச் சிறைக்கு வெளியே இருக்கும் காங்கிரஸ்காரர்களின் கூட்டமொன்றை நடத்துவது சம்பந்தமாக இருவரும் விவாதித்தனர்.

போராட்டம் சம்பந்தமான ஆகஸ்ட் தீர்மானத்தின் பகுதியை நிறுத்தி வைக்கலாமென்று வற்புறுத்த யோசனை இல்லை என்றும் தற்போது நாட்டில் ஏற்பட்டுள்ள நிலைமையை மகாத்மாஜிக்கும், பாதுகாப்பில் உள்ள இதர முக்கிய காங்கிரஸ் தலைவர்களும் தெரிவிக்கலாமென்று யோசனை கூறப்படுமென்றும் நம்பப்படுகிறது.

* * * *

## பிலிப்ஸ் விஜயம் ஒத்தி வைப்பு?

தக்க ஆதாரம் மூலம் கிடைத்த செய்திகளிலிருந்து இந்தியாவிற்கு பிலிப்ஸ் திரும்பி வரும் வேலைத் திட்டம் நிச்சயமாக ஒத்தி வைக்கப்பட்டிருப்பதாக நம்பப்படுகிறது. பிலிப்ஸ், ரோம், ஹேக் ஆகியவிடங்களில் அமெரிக்கத் தூதரா யிருந்து வந்ததுள்பட ராஜீய விவகாரம் சம்பந்தமாக வெளிநாடுகளில் அநேக உயர்ந்த ஸ்தானங்களும் வகித்து வந்துளார். அப்படிப்பட்டவரின் அனுபவத்தையும் திறமையையும், இந்தியாவிலிருந்து வாஷிங்டனுக்கு அபிவிருத்திகளைப் பற்றி அறிக்கை அனுப்புவதில் வீணாகும்படி ரூஸ்வெல்ட் அனுமதியாதிருக்கக் கூடும். சில காலம் வாஷிங்டனிலேயே யிருந்து அவர், ரூஸ்வெல்ட்டுக்கு ஆலோசனை கூறக்கூடுமென கருதப்படுகிறது.

அவர் இந்தியாவிற்குத் திரும்பி வருவதன் மூலம் நேசதேசங்களுக்குப் பிரயோஜனமான சேவை செய்யக்கூடுமா வென்ற விஷயம், புது வைஸ்ராய் லார்டு வேவல் இந்தியா திரும்பியதும், உள்நாட்டு விஷயங்களையொட்டியும் யுத்த விஷயங்கள் சம்பந்தமாகவும் மேற்கொள்ளும் வேலைத் திட்டத்திலிருந்து நிர்ணயிக்கப்படும்.

* * * *

## 1944-ல் சமாதானம்

ஜூன் மாதம் 27-ந் தேதியன்றே முஸோலினி வீழ்ச்சியுறுவாரென முற்கூறிய மத்ய மாகாண பிரபல ஜோஸ்யரும், பீடுல் அஸிஸ்டன்ட் கமிஷனருமான ஸ்ரீ எம். டி. ஸாகானி பொதுக்கூட்டமொன்றில் பேசுகையில், இத்தாலி விரைவில் நேசதேசங்களின் நண்பனாகுமெனவும், முஸோலினியின் வீழ்ச்சிக்கு அவரது பத்தாவது கிரகத்தில் தோஷமிருந்ததே காரணமெனவும், ஹிட்லரது பத்தாவது கிரகத்தில் சூரிய, சந்திர கிரஹணங்கள் ஏற்படுவதாலும், சனிக் கிரகத்திற்கு இரு பக்கத்திலும் ஏற்படுகிறதாலும் அவரும் முஸோலினியின் கதியை அடைவது நிச்சயமெனவும், விரைவில் அவ்வீழ்ச்சி ஏற்படினும் ஆச்சரியமடையக் காரணமில்லையெனவும் குறிப்பிட்டார்.

ஆகஸ்ட் 1-ந் தேதியிலிருந்து கிரஹங்கள் இருக்கும் நிலைமையில் சமாதானத்திற்குரிய போக்கு காட்டி, 1944 டிசம்பர் மாதத்திற்குள் அது உறுதியாகத் தெரியுமென்றும் மேலும் அவர் கூறினார்.

* * * *

## அரசியல் கைதிகள் நிலைமையைத் திருத்த யோசனை?

ராஜீயக் கைதிகளையும், பாதுகாப்புக் கைதிகளையும் நன்றாக நடத்த வேண்டுமென்பது சம்பந்தமான ஸ்ரீமான் டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரின் தீர்மானம் மத்ய சட்ட சபையில் நிறைவேற வில்லையானாலும் விவாதத்தின்போது மெம்பர்கள் பலரும் வெளியிட்ட அபிப்பிராயங்களை மனதில் கொண்டு நிலைமையை இந்திய சர்க்கார் சீக்கிரத்தில் பரிசீலனை செய்வரென்று தெரிகிறது.

உணவு, புத்தக வசதி, வைத்திய வசதி பேட்டிகள் கடிதங்கள் எழுதுதல் இவை விஷயத்தில் திட்டமாக நிலைமை அபிவிருத்தி அடையுமெனக் கூறப்படுறது.

# போர் போகும் போக்கு

## ஸிஸிலிப் போர்

ஸிஸிலியில் நேசப்படை தனது தாக்குதலை சென்ற ஞாயிற்றுக் கிழமை பிற்பகலில் துவக்கியது. இவை கடானியா சமவெளியின் மேற்குக் கோடிக்குள் நுழைந்துவிட்டன. கனடியர் ரீகலபுடோ என்ற முக்கிய மான நகரையும் அமெரிக்கர் டிரோனியா என்ற விடத்தையும் 78 வது டிவிஷன் சென்ட்ரைப் என்ற விடத்தையும் பிடித்து விட்டன. ஸார்டினியா, கார்ஸிகா ஆகிய தீவுகளுக்கு ஜெர்மனியர் உதவிப் படைகளை அனுப்பமுயன்றனர். ஆனால் பிரிட்டிஷ் விமானங்கள் வழி மறித்து சில ஜெர்மன் துருப்பு விமானங்களை அழித்தன. மெஸ்ஸினுவுக்கான போர் துவங்கிவிட்டதால் கடானியாப்போரில் முக்கியம் சற்று குறைய ஆரம்பித்திருக்கிறது.

கடானியா வழியைப் பாதுகாக்கும் ஜெர்மன் பாரசூட் படையினரும் காலாட்படையினரும் கிரீட்டில் இறங்கிய ஜெர்மன் துருப்புகளைப்போல காட்டு மிராண்டித்தனமும் உறுதியும் வாய்ந்தவர்களாக இருக்கின்றனர்.

* * * *

## இத்தாலியருக்கு எச்சரிக்கை

8 தினங்களுக்கு மேலாகக் காத்திருந்தும் படாக்ளியோ சமாதான முயற்சி எதுவும் செய்யவில்லை என்றும் அவர் தேசத்தைக் காட்டிகொடுத்து வருவதாகவும் இனி காத்திருக்க முடியாதென்றும் இத்தாலிய நகரங்கள்மீது நேச விமானங்கள் கடும் தாக்குதலைத் துவக்குமென்றும் இத்தாலியை விட்டு ஜெர்மனியரைத் துரத்தினுல் இத்தாலிக்கு கௌரவமான சமாதானம் கிடைக்குமென்றும் நேசதேசத்தார் ரேடியோமூலம் எச்சரித்திருக்கின்றனர். ஆனால் ஜெர்மனியர் வட இத்தாலியில் துருப்புகளைக் கொண்டு வந்து குவித்து வருகிறார்கள். பல முக்கியமான தளங்களை ஜெர்மனியர் வசப்படுத்திக்கொண்டிருக்கின்றனர். இதனால் இத்தாலியர் எது செய்தாலும் ஜெர்மனியர் இத்தாலியைப் போராடாமல் கைவிடமாட்டார்களென்று தெரிகிறது. இத்தாலியும் இதுவரை படையில் சேராதவர்களையும் சேரும்படி ஆக்ஞையிட்டிருக்கிறது. இத்தாலிய கடற்படைக் கப்பல்கள் போருக்குப் புறப்படுமாறு ஆக்ஞையிடப்பட்டிருக்கின்றன. 3-ந்தேதி புதன் கிழமை அரசர் தலைமையில் ராஜாங்க சபைக் கூட்டம் நடந்தது. இத்தாலிய 'தேசாபிமானிகள்' அரசரும் படாக்ளியோவும் முறையே தம்தம் பதவிகளைத் துறக்க வேண்டுமென பிரசாரஞ்செய்து வருகிறார்கள். முஸோலினி குடும்பத்தார் அனைவரும் கைது செய்யப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. சில நாட்களுக்கு முன்பு தூங்கிக்கொண்டிருந்த பிரிட்டிஷ் யுத்த மந்திரி சபையைச் சேர்ந்த மந்திரிகளை அவசரமாக எழுப்பிவரச் செய்யப்பட்டது. யுத்தமந்திரிசபையின் அவசரக் கூட்டத்தை பிரதம மந்திரி நடத்தினார். அதன்பிறகு அவர் ரூஸ்வெல்டுடன் டெலிபோனில் பேசினார். ரூஸ்வெல்டும் நிபந்தனையின்றி சரணாகதியடையும் வரை போர் புரியப் போவதாகத் தெரிவித்திருக்கிறார்.

* * * *

## சரணடைய மறுப்பு

இத்தாலி தீரத்துடன் போராடியிருக்கிறது. இதன் தீரத்தை விரோதிகளே ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள். இப்படிப்பட்ட தேசம் கௌரவமான சரணாகதி அடையுமென எதிர்பார்ப்பது சுத்த அபத்தம். சரணாகதிக்கும் கௌரவத்திற்கும் பொருத்தமென்பதே இல்லை. இரண்டும் முரண்பட்ட பதங்களாகும். சரணடைவதில் கௌரவமென்பதே இல்லை என்று எதிரிகள் கருத்து ரேடியோவில் வெளியாயிற்று.

* * * * *

## சமாதான வேண்டுகோள்

இத்தாலியருக்கு ஜெனரல் ஐஸன் ஹோவர் விடுத்த சமாதான வேண்டுகோளைப் பிரசுரிப்பதற்கு இத்தாலியில் தடை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆயினும், சில முக்கிய நகரங்களில் அவை சிறு துண்டுக் காகிதங்கள் மூலம் வெளியாயின.

## நடு நிலைமை நாடுகளுக்கு ஜனாதிபதி எச்சரிக்கை

யுத்தக் குற்றவாளிகளுக்கு நடு நிலைமை நாட்டினர் தஞ்சம் தரக்கூடாதென ஜனாதிபதி ரூஸ்வெல்ட் பத்திரிகா நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் சென்றவாரம் ஒரு எச்சரிக்கை விடுத்தார்.

இத்தாலியில் எதிர்ப்பைக் குலைத்து அராஜகம் ஏற்படாமல் தடுப்பதே நேச நாட்டாரின் நோக்கம் என்றும் ஜனாதிபதி கூறினார்.

மார்ஷல் படோக்ளியோ பாஸிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவரா என்ற கேள்வி எழுந்த போது ஜனாதிபதி தாம் தனி நபர்களைப்பற்றிப் பிரஸ்தாபிக்க முடியாது எனத் தெரிவித்து விட்டார்.

சமயம் வந்தால், மன்னருடனோ, பிரதம மந்திரியுடனோ, அல்லது மேயருடனோ சமாதானப் பேச்சை நடத்தத் தாம் தயார் எனவும் அவர் கூறினார். இதற்குப் பின் ஜனாதிபதி ஒரு அறிக்கையை விடுத்தார்.

ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் செய்த கொடுமைகளுக்கு அச்சு நாட்டாரை சும்மாவிடப் போவதில்லை என அதில் அவர் குறிப்பிட்டதாகவும், அக்டோபர் மாதம் 19-ம் தேதியன்று இந்த யுத்த முடிவில் இதற்குக்

(32-ம் பக்கம்)




## மங்கம்மா சபதம்

தென்னிந்தியாவில் தயாராகும் படங்களைப் பற்றிப் புகார்கள் அதிகமாகக் கூறப்பட்டு வந்திருக்கின்றனவேயன்றி புகழ் பற்றி அவ்வளவாகச் சொல்வதில்லை; சொல்வதற்கும் இல்லை. சமீப காலமாக இந்த நிலைமை கொஞ்சம் கொஞ்சமாக மாறுதலடைந்து வருகிறது. குறையாகக் குறிப்பிட்டு வந்தவற்றையெல்லாம் களைந்து பலதரப்பட்ட ருசியுள்ளவர்களும் ரஸிக்கத் தக்க வகையில் 'ஜெமினி மங்கம்மா சபதம்' தயாரிக்கப்பட்டிருக்கிறது. சென்றவாரம் முதல் சென்னையில் இரண்டு தியேட்டர்களில் இப்படம் காட்டப்பட்டு வருகிறது.

தமிழர்களுக்கெல்லாம் பரிச்சயமான கதைதான் மங்கம்மா சபதம். இளவரசனின் கொட்டத்தை அடக்கி இறுதியில் தான் செய்த சபதத்தை நிறைவேற்றிக் கொள்கிறாள் குடியான வகுப்பு பெண் மங்கம்மா.

ஸ்ரீமதி வஸுந்தராதேவியும், ஸ்ரீரஞ்சனும் இப்படத்தில் பிரதான நடிகர்கள். என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் இருவரும் இதில் நடிக்கிறார்கள். கதைப் போக்கிலேயே இவர்களது ஹாஸ்ய நடிப்பும் சேர்ந்திருக்கும்படி இவர்களிருவருக்கும் பாகம் இப்படத்தில் கொடுக்கப்பட்டிருப்பதைக் குறிப்பிட வேண்டும்.

மங்கம்மாவாகத் தோன்றும் வஸுந்தராதேவி திறம்பட நடித்திருக்கிறார். கர்னாடக சங்



'நீலம்'

கீதத்தில் அவர் பாடும் பாட்டுக்கள் வெகு இனிமையுடன் விளங்குகின்றன. 'சிறிதும் கவலைப்படாதே' என்று கரஹரப்பிரியா ராகத்தில் பாடும் பாட்டும், யதுகுல காம்போஜி, குறஞ்சி ஆகிய ராகங்களில் பாடும் தாலாட்டும் தரமானவை. மங்கம்மா தந்தையாகத் தோன்றும் சுப்பையாப் பிள்ளை நடிப்பு வெகு இயற்கையாயிருக்கிறது. ரஞ்சன் நடிப்பும், பாட்டும், திருப்திகரமாயிருக்கின்றன. படப்பிடிப்பு, ஒலிப்பதிவு, ஜோடனைகள், உடைகள், டைரக்ஷன் முதலிய அனைத்தும் மாசு மருவின்றி விளங்குகின்றன.



## ஸ்ரீ வி. வி. சடகோபன்

சென்ற செவ்வாய்க்கிழமை இரவு 8 முதல் 9-15 மணி வரையில் ஸ்ரீமான் வி. வி. சடகோபன் சென்னை ரேடியோ நிலையத்தில் பாடினார். நல்ல கனமான சாரீரம்; கணீரென்று முழு வேகத்துடன் மூச்சுக் கொடுத்துப் பாடுகிறார். கானடா, பஹுதாரி, ஸிம்மேந்திர மத்தியமம், சங்கராபரணம் ஆகியராகங்களில் கீர்த்தனைகளை எடுத்துக்கொண்டார். பஹுதாரி, சங்கராபரண ராகங்களின் ஆலாபனை அன்று அவரது கச்சேரியில் விசேஷமாக விளங்கின. சங்கராபரண ராகத்தை அவர் ஒவ்வொரு இடத்திலும் நிதானமாக நின்று நிறுத்தி விரிவாகப் பாடியதையும், 'மனஸு ஸ்வாதீன' கீர்த்தனையில் நிரவல், ஸ்வரம் பாடியதையும் மிகவும் விசேஷமாகக் குறிப்பிடவேண்டும். அவர் பாடியபோதெல்லாம் தம்பூரா ச்ருதி எங்கிருக்கிறதென்பதே தெரியாமல் மூழ்கிவிட்டது. ராகங்களின் மூர்ச்சையைக் காட்டும்போதும், பிடில்



வாசித்தபோதும்தான் சுருதி காதில் விழுந்தது. சற்று அடக்கிப் பாடியிருந்தால் ஸ்ரீ சடகோபனின் கச்சேரி இன்னும் அற்புதமாயிருந்திருக்கும். ராகமாலிகையாக ஓர் பாசுரம் பாடினார். அதில் காபி, ஹம்ஸாநந்தி இரு ராகங்களையும் சுகபாவம் நிறைந்த சாயைக் கொடுத்துப் பாடினார். 'ஆயர் குலச் சிறுவன்—அவன் மாயக்காரனடி—தோழி' என்ற பாட்டும் இனிமையாக விருந்தது. வித்வத் நிறைந்த சிறந்த இளம் பாடகர்களில் ஸ்ரீ சடகோபனும் முதன்மை ஸ்தானத்தில் நிற்கிறார் என்று கூறுவது பொருந்தும்.

—



# சாந்தினி



அத்தியாயம் 2

சுரேஷ்

'கஜமுகன்'

★



மறுநாள் காலை எழுந்திருக்கும் பொழுது வெகு நேரமாகி விட்டது. ஹோட்டல் வேலைக்காரப் பையன் எழுப்பியவுடன் தான் எழுந்திருந்தேன். "அடடா! மணி பத்தாகி விட்டதே! வெயிலின் உக்கிரம் அதிகமாக ஆரம்பித்து விட்டது. இனி மேல் எங்கேயும் வெளியில் போவது முடியாத காரியம். சாயங்காலம்தான் போக முடியும்." என்று தீர்மானம் செய்து கொண்டேன். நான் வந்த காரியத்தின் அவசியத்தை உணராமல் தூங்கியது எனக்கே மிகவும் வெட்கமாய்த் தான் இருந்தது.

சாயங்காலம் நாலு மணிக்கு வெளியே கிளம்பினேன். எங்கே போவதென்று தெரியாமல் கால் போன போக்கில் போய்க் கொண்டிருந்தேன். ரோட்டில் போவோர் வருவோர் ஒவ்வொருவரையும் உற்று உற்று பார்த்துக் கொண்டே சென்றேன். ராம் பிரகாஷ் மாதிரி யாருக்காவது முகஜாடையிருந்தால் அவர்களை சற்று நிதானித்துக் கவனிப்பேன். நான் இம்மாதிரி ஒவ்வொருவரையும் கவனிப்பதைப் பார்த்து அநேகர் என்னை வெறித்துப் பார்க்க ஆரம்பித்து விட்டார்கள் 'ஒரு வேளை பைத்தியமோ' என்று சிலர் நினைத்துப் பேசிக் கொண்டு போனதும் என் காதில் விழாமல் போகவில்லை. சிலர் திருடன் என்றுகூடச் சந்தேகித்ததாகத் தெரிந்தது. "சே! இப்படியே போனால் ஏதாவது ஆபத்தில் வந்து சேரும்" என்று நினைத்துக் கொண்டு ஒருவரையும் பார்க்காமல் நேரே சென்றேன்.

மூன்று மணி நேரம் அலைந்து விட்டேன். கால்கள் வலிக்க ஆரம்பித்துவிட்டன. இனிமேல் ஹோட்டலுக்குத் திரும்ப வேண்டியதுதான் என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டு சுற்றுமுற்றும் ஒரு தடவை பார்த்தேன்.

ராம்பிரகாஷின் நண்பன் ஒருவன் வந்து கொண்டிருந்தான். அவன் அடிக்கடி ராம் பிரகாஷ் வீட்டிற்கு வருவதுண்டு. அவன் இங்கு எங்கு வந்தான்? என்பதுதான் என் மனதில் எழுந்த கேள்வி. அதற்கு மறு நிமிடமே என்னுள்ளம் விடை கொடுத்தது. 'ஏன்? அவன் ஒரு வேளை ராம் பிரகாஷுடனேயே வந்திருக்கலாம்" என்றது என் மனம்.

இவ்வளவு தூரம் அலைந்தது வீணாகப் போகவில்லை என்று நினைத்துக் கொண்டு, "சுரேஷ்!" என்று கூப்பிட்டேன்.

"யார்? நிர்மல்பாபுவா? எங்கே இப்படி அதிசயமாய் இருக்கிறது?" என்று கூறிக்கொண்டே என் அருகில் வந்தான்.

"எல்லாம் அதிசயந்தான் அப்பா! என்றுமில்லாத காரியங்கள் நடந்தால் அதிசயம்தான்!"



'யார் நீங்கள்?' என்றாள் வேலைக்காரி. 'யாரென்று உனக்குச் சொல்ல வேண்டியதில்லை' யென்றார் நிர்மல்பாபு.

"என்ன விசேஷம்? ஏன் இப்படி இங்கே தயங்கித் தயங்கி நிற்கிறீர்கள்?"

"ஊருக்குப் புதிதல்லவா, அதுதான் இடம் தெரியாமல் தயங்கி நிற்க வேண்டியிருக்கிறது! அதிருக்கட்டும். நீ எங்கே இங்கு வந்தாய்?"

"நானா? என் சொந்த ஊர் இதுதானே! இங்கு வராமல் நான் எங்கு போவேன்?

"பிறகு ராம்பிரகாஷ் வீட்டில் அடிக்கடி பார்த்திருக்கிறேனே!" அவன் ஏதாவது உறவா?

"அதெல்லாம் இல்லை இருவரும் அத்யந்த நண்பர்கள். அந்த ஊரில்தான் நான் படித்தேன் அதனால் அவன் வீட்டிற்கு வருவேன். நீங்கள் எங்கு தங்கியிருக்கிறீர்கள்? என் வீட்டிற்கு வாருங்கள் போகலாம்"

"உன் வீட்டிற்கு வருவதற்காக உன்னை நான் கூப்பிடவில்லை. அதைவிட முக்கியமான விஷயம் உன்னிடமிருந்து எனக்குத் தெரியவேண்டும்."

"என்ன விஷயம்? வாருங்கள் பேசிக்கொண்டே போகலாம்."

"உனக்கு ராம் பிரகாஷ் விஷயம் தெரியுமா? நீ பேப்பர் பார்ப்பதுண்டா?"

"உண்டு. ஆனால் இரண்டு மூன்று நாளாகப் பார்க்கவில்லை. ராம் பிரகாஷ் விஷயம் என்ன? நேற்றுக்கூட பெரிய மார்க்கெட்டுக்குப் பக்கத்திலுள்ள இந்திராதேவி வீட்டில் பார்த்தேன். எங்கே வந்தாய் இங்கு என்றேன். ஏதோ வேலை விஷயமாக வந்திருப்பதாயும் இந்திரா தேவி என்பவள் அவனுக்கு ஏதோ பந்து வென்றும் சொன்னான்."

இதைக் கேட்டவுடன் என் மனம் எவ்வளவு சந்தோஷமடைந்திருக்கும் என்று நீங்களே எண்ணிப் பாருங்கள் என் காரியம் இவ்வளவு எளிதில் கைகூடும் என்று நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. சுரேஷை எப்பொழுது பார்த்தேனே அப்பொழுதே ஏதாவது தகவல் கிடைக்கும் என்று எண்ணியது மிகவும் சரியாகப் போய்விட்டதென்று நினைத்துக் கொண்டேன்.

"சுரேஷ்! உன்னைப்பார்த்தது மிகவும் நல்லதாகப் போய்விட்டது. இல்லாவிட்டால் நான் ராம்பிரகாஷ் இருக்குமிடத்தை அறிந்து கொள்வதற்கு பிரும்மப் பிரயத்தனம் செய்ய வேண்டியிருந்திருக்கும். என்னை தயவு செய்து அந்த இந்திரா தேவி வீட்டிற்குக் கொண்டு போய் விட்டுவிடு." என்றேன் நான்.

"என்ன நிர்மல் பாபு! ஏதோ ராம்பிரகாஷின் விஷயம் தெரியுமா என்று முதலில் கேட்டீர்கள். பிறகு அதை மறைத்து விட்டீர்கள். விஷயத்தை விளங்கச் சொல்லுங்கள்." என்றான்.

"இப்பொழுது விளங்கச் சொல்வதற்கு நேரம் கிடையாது சுரேஷ்! நாளை நிச்சயமாய்ச் சொல்கிறேன். என்னை முதலில் அந்த வீட்டில் கொண்டு போய் விட்டு விடு." என்றேன்.

ஆனால் சுரேஷ் என்னை விடுவதாயில்லை. நான் அவனிடம் விஷயங்களைச் சொல்லித்தான் ஆகவேண்டுமென்று பிடிவாதம் பிடித்தான். சொல்லாமல் என்ன செய்வது?

விஷயம் முழுவதையும் கேட்டுக்கொண்டான். அவன் முகத்தில் ஒருவிதமாறுதல் ஏற்பட்டது. அதை வருத்தமென்றும் சொல்லமுடியாது; சந்தோஷமென்றும் சொல்ல முடியாது. இரண்டும் கலந்த ஒரு வெறுப்புப் பார்வையாக இருந்தது.

"நிர்மல் பாபு! ஜீவன் பிரகாஷ் தன் தம்பி விஷயத்தில் இவ்வளவு நம்பிக்கையும் பாசமும் வைத்திருந்தது பொருந்தாது. நானும் அவனை என் ஆருயிர் நண்பனாகக் கருதியது தவறு என்று எனக்கு இப்பொழுது தெரிகிறது. நீங்களும் அவனைத் தேடிக்கொண்டு இங்கு வந்தது நியாயமென்று கருதக் கூடியதல்ல" என்றான்.

அவன் இப்படிப் பேசியதில் எனக்கொன்றும் விளங்கவில்லை. எல்லோருடைய செய்கைகளையுமல்லவா தவறு என்று இவன் கருதுகிறான், என்று நினைக்கும் பொழுது ராம்பிரகாஷின் வெளிப்புறவாழ்க்கையில் ஏதோ விஷயங்கள் அடங்கியிருக்கின்றன என்று நினைத்துக்கொண்டேன். அதுவும் அவன் இந்திராதேவி என்ற ஒரு பெண் வீட்டில் இருப்பதாகக் கூறுகிறானதலால் அந்தப் பெண்ணிற்கும் ராம்பிரகாஷிற்கும் வெகு நாளாக ஏதோ தொடர்பு இருந்திருக்கத்தான் வேண்டும் என்று என் மனதில்பட்டது.

"சுரேஷ்! நீ சொல்வதில் அர்த்தம் ஒன்றுமில்லை. ஜீவன்பாபுவின் சகோதர வாஞ்சையைக் குறித்து குறை சொல்வது என் மனதிற்குப்பிடிக்கவில்லை. அவனைத்தேடிக்கண்டு பிடிக்க வேண்டும் என்பதுதான் அவர் ஹிருதயத்தில் தற்பொழுதுள்ள ஒரே எண்ணம். அந்த எண்ணத்தைப் பூர்த்தி செய்யத்தான் என்னை அனுப்பியிருக்கிறார். ஒரு நண்பருக்காகச் செய்ய வேண்டிய கடமையை நான் செய்யவந்திருப்பதால் நீ என்னைக் குறை கூறுவதும் நியாயமாகாது. எது எப்படி வேண்டுமானாலும் போகட்டும். நான் ராம்பிரகாஷை இப்பொழுது பார்க்க வேண்டும்" என்றேன் நான்.

"நிர்மல் பாபு, அவசரப்பட்டு ஆத்திரமடைவதில் பயனில்லை. இந்திராதேவி என்று ஒருத்தியைப்பற்றி ஒரு சமயம் நான் கேள்விப்பட்டதும் உண்டு, பார்த்ததும் உண்டு. அவளைப்பற்றிய செய்திகளை இப்பொழுது நான் கூறத் தயாரில்லை. நான் உங்களுக்கு இப்பொழுது ஒரே வார்த்தைதான் சொல்ல முடியும். இன்றிரவு நீங்கள் அங்கு போக வேண்டாம். நாளைக் காலையில் போகலாம். ராம் பிரகாஷ் எங்கேயும் ஓடிவிடமாட்டான். பேசாமல் என் வீட்டிற்கு வாருங்கள் என்றான்."

"என் காரியத்தை எவ்வளவு சீக்கிரம் முடிக்கிறேனோ அவ்வளவு சீக்கிரம் முடிப்பது நலம் என்று கருதுகிறேன். பாவம்! சாந்தினி சகோதரனைப் பிரிந்த வருத்தத்தால் மிகவும் வாடி வதங்கிக் கிடக்கிறாள். அவளுக்கு நல்ல செய்தியைத் தெரிவிக்க வேண்டும்."

"நிர்மல் பாபு, சாந்தினியின் மனம் எனக்குத் தெரியாமலில்லை. இந்த உலகத்தில் அவளுக்கு இரண்டின் பேரில் அளவு கடந்த ஆசையுண்டு. ஒன்று தன் சகோதரன் ராம்பிரகாஷ். மற்றொன்று நம் தேசம் சுதந்திரமடைய வேண்டுமென்பது. அவளுள்ளத்தில் சுதந்திரமடைய வேண்டுமென்ற வேட்கை அதிகம் காணப்படுகிறது. அது அவ

(27-ம் பக்கம்)




28

# 'நிலா முற்றத்தில்'



**வ. வேணுகோபாலன்**

"இல்லையே!"

"யாரும் உங்களுக்கு உறவினர் இந்நகரில் இல்லையா?"

"நிச்சயமாக ஒருவரும் இல்லை! ஏன் எதற்குக் கேட்கிறாய்?"

ஸத்துகன் 'இல்லை' என்று மறுமொழி அளித்ததும் சயந்தி வியப்புடன் ஆலோசனை செய்தாள். 'ஸத்துகருக்கு நான் உறவினள் என்றல்லவா அவள் கூறினாள்! இல்லையென்று இவர் சொல்கிறாரே! யார்சொல்வது உண்மை? இவர் என்னிடம் எதுவும் மறைப்பதில்லை. ஒருக்கால் வந்தவளே பொய் கூறி யிருந்தால்?—ஏன்?—அவள் எதற்குப் பொய் கூறவேண்டும்? தான் யாரென்பதை அவள் மறைத்துக் கூறியதில் என்ன பயன் இருக்கிறது?'-இவ்வாறு சயந்தி சிந்தித்தாள். அதற்குள்ளாக ஸத்துகன் இடைமறித்து, "என்ன சயந்தி, நீ கேட்டது எதற்காக?—" என்றான் சந்தேகத்துடன்.

நேற்று நீங்கள் காஞ்சிக்குப் போயிருந்த சமயம், ஒரு யுவதி சேடியுடன் இங்கே வந்தாள். என்னையும், சுகதனையும் பார்க்கவேண்டுமென்று வந்தாள். தங்களுக்கு உறவினள் என்றும் சொன்னாள். சிறிது நேரம் சுகதனைக் கொஞ்சிக் குலாவிவிட்டுச்சென்றாள். ஆனால் அவள் ஏதோ பிரமை பிடித்தவள்போலிருந்தாள். நல்ல அழகு, சுகதனிடம் எல்லையற்ற அன்பு பாராட்டினாள். வரும்போது அவளுக்கிருந்த வேகம், திரும்பிச் செல்லும்போதில்லை. ஏதோ வருத்தத்தால் தாக்குண்டவள் போல்போனாள். எனக்கு மிகவும் இரக்கமாக இருந்தது, ஆனால் நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களே! அவள் வேறு யாராக இருக்க முடியும்?"

### சேடியைத் தெரியாதா?

ஸத்துகனின் கண்கள் வெறித்துப் பார்த்தன. வாய்க்குள் ஏதோ முணுமுணுப்பது, சயந்திக்குக் கூடப் புலப்பட்டது. சயந்தி கூறிய வார்த்தைகளைக் கொண்டு, சட்டென்று ஸத்துகன் உண்மையைக் கண்டறிந்தான். கணநேரம் அவன் உடல் குலுங்கியது. சயந்தி அவள் யாரென்று உனக்குத் தெரியவில்லையா? அவளுடன் வந்த சேடியை நீ அறியாயா?" என்றான் கண்களை அகல விழித்து.

சயந்திக்கு புதிர் போலிருந்தன ஸத்துகனின் வார்த்தைகள்.

"என்ன சொல்கிறீர்கள்?" எனக்கு அவர்களை எப்படித் தெரியும்? விளங்கச் சொல்லுங்கள்."

"சேடியாக வந்தவள், வசந்தியல்லவா?" அவளை நீ இளந்தத்தன் மாளிகையில் பார்த்திருக்கிறாயே!"

"சேடி வசந்தியா? அவள் அல்ல! சேடியுடன் வந்தவள் பத்திரை என்று குறிப்பிடுகிறீர்கள்?" என்று மருள நோக்கினாள்.

"ஆம்! ஐயமில்லை. அவள் பத்திரைதான்; வசந்தி வராதற்குக் காரணம் உண்டு; உன்னை அவளுக்குத் தெரியுமல்லவா?"



ஸத்துகன் வசந்தியின் மார்பில் கத்தியால் குத்தினான். பத்திரை அது கண்டு பதறினாள்.

"ஆ! பத்திரை யென்று தெரியாமற் போயிற்றே! பாவம்! ஏன் இந்த மனக்கலக்கம் அவளுக்கு? சுகதனிடத்து அன்பு பாராட்டியதன் காரணம் இப்போது தான் எனக்குத் தெரிகிறது! அவள் யாரென்று தெரிந்திருந்தால் அவள் மனவருத்தத்தை அப்போதே போக்கியிருப்பேன்! கணிகை மகளாகிய என்னிடம் அவளுக்கு கோபம் இருப்பது இயல்புதான். ஆனாலும் அப்படி நான் என்ன பாதகம் அவளுக்குச் செய்து விட்டேன்?—" என்று கூறியவளாய் ஸத்துகனின் கரங்களை இறுகபற்றி, தாங்கள் எனக்காக வாவது பத்திரையின் விருப்பத்தை பூர்த்தி செய்ய தவறக் கூடாது! அவள் உள்ளம் வருந்தினால் என் உள்ளம் வெந்து போகும்" என்று மன்றாடினாள்.

### யார்மீது குற்றம்?

"சயந்தி, உனக்கும் அவளுக்கும் எத்தனையோ அதிகம் வேற்றுமை உண்டு. உன்னுடைய அருங்குணத்துக்கும் அவள் குணத்திற்கும் எத்தனை ஏற்றத்தாழ்வு இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். ஆனால் அவளுக்கு இந்த வஞ்சகம் எதற்கு?"

"இதில் வஞ்சகம் என்ன இருக்கிறது? பேதைமையால் செய்த செய்கை தானே! தங்கள் உயிர் காத்த மங்கை யல்லவா அவள்! அவளிடம் கருணை காட்டுவது தங்கள் கடமை, நான் இதில் என்ன சொல்லுவேன்?"

"சயந்தி, உண்மை எனக்குத் தெரியும்; அவள் மீது குற்றமே இல்லை. கபடமற்றவள் தான் அவள்!— ஆனால் அதற்குக் காரணம்—"

"காரணம் என்ன? வேறு யார்மீது குற்றம்?"

"உனக்கு என் வரலாற்றைக் கூறிய வசந்தி தான் அதற்குக் காரணம். இவ்வளவுக்கும் அவளே காரணம். பத்திரையின் மனமாற்றத்திற்கு அவளே காரணம்; அதைப்பற்றி இனி நீ நினைக்கவும் வேண்டாம்; நான் பார்த்துக் கொள்கிறேன்."

ஸத்துகன் வார்த்தைகளைக் கேட்டதும் சயந்தி கலக்கமுற்றாள். ஸத்துகன் ஆழ்ந்து யோசித்தான். ஏதோ முடிவுக்கு வந்தவன் போல் எழுந்திருந்தான்.

"சயந்தி, நான் அங்கே போய் வருகிறேன்; நிலா நன்றாகப் பரந்திருக்கிறது, விரைவில் திரும்பி விடுகிறேன்" என்றான்.

"ஏன் இவ்வளவு அவசரம்; சரி, போய் வந்து விடுங்கள்; நிலவு மறைவதற்குள் வந்து விடுவீர்களா?" என்று சந்தேகத்துடன் வினவினாள்.

"வந்து விடுகிறேன்; கதவைத் தாழிட்டுக் கொள்" என்ற கூறி கீழிறங்கி குதிரைமீது அமர்ந்தான். மன அமைதியின்றியே சயந்தி கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

* * * * *

### ஸத்துகன் விஜயம்

நிலா முற்றத்தில் வசந்தியுடன் பேசிக் கொண்டு பத்திரை அமர்ந்திருந்தாள். ஸத்துகனைப்பற்றிய முழு விவரமும் வசந்தியின் வார்த்தைகளாலே உணர்ந்து கொண்டாள். அல்லாமல், சயந்தியைக் கண்டு வந்தது முதல் அவள் மனம் வெம்பி விட்டது. ஸத்துகனின் வஞ்சனையை முற்றும் உணர்ந்த பின், அவள் மனம் அமைதி பெறுமா? சயந்தியை நினைக்கும் போதெல்லாம் பத்திரையின் மனம் துடிக்கும். 'சயந்தியிடம் காதல் கொண்டபின் என்னிடம் இவருக்கு அவ்வளவு காதல் ஏன் உண்டாகியது? ஏன் சட்டென்று அது தடைப்பட்டது? அப்போதே உண்மை தெரிந்திருக்குமானால்?— ஏன் வசந்தி கூடத் தடை சொன்னாள்! சீ! என் மனம் பலவாறு சிதறுகிறது. இனி என்ன நேரிடினும் சரி; அவருக்கு வாழ்க்கைப்பட்ட நான் அவர் நன்மையை நாடவேண்டும்; அவருக்கு என் மீது துளியன்பு இருக்குமளவும், அன்பு வறண்டு போன பின்பும்கூட, நான் அவருக்கு அடிமை. ஒரு கணிகையை அவர் காதலித்ததற்காக, நான் அவருடன் ஏன் மன மாறுதல் கொண்டு இருக்க வேண்டும். ஆனால், அந்தப் பழைய இன்ப நாட்களை நினைக்கும்போது என் மனம் இப்போது கொதிக்கின்றது; இந்தப் புண் ஆறாதது. எவ்வளவு சமாதானம் நான் செய்து கொண்டாலும் என் உள்ளம் ஒருபோதும் முன்னிலையை அடையாது! போதி நாதா! உன் அருள் இதுதானா!—' இவ்வித நினைவலைகளுடன் பத்திரை களைப்புற்றுக் கண்ணயர்ந்திருப்பதை உணர்ந்த வசந்தியும், முற்றத்தில் கீழே படுத்து, அண்ணாந்து நடுவானத்தில் நிர்மலமாய் விளங்கும் முழு மதியின் வடிவத்தைக் கண்டு, ஏதேதோ கற்பனை செய்து கொண்டிருந்தாள். சந்திரனுக்கு அருகில் இருந்து ஒரு நக்ஷத்திரம் பூ உதிர்வது போல், விர்ரென்று கீழே வீழ்ந்தது. அது எங்கே வீழ்கிறது என்பதைக் கூர்ந்து நோக்கியவளாய் வசந்தி சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். அது மறைந்த இடம் எப்படித் தெரியும்? வசந்தி ஆலோசனையுடன் மீண்டும் கீழேபடுத்த வளவில் "வசந்தி!" என்ற குரல் கேட்டதும் திடுக்கிட்டு எழுந்தாள்; திரும்பிப் பார்த்தாள். ஸத்துகன் புன் முறுவலுடன் நிற்பது நிலவொளியில் நன்கு தெரிந்தது. அவனை யறியாமல், வசந்திக்கும் முகத்தில் புன்முறுவல் அரும்பியது; "இங்கு அமருங்கள்; பத்திரை தூங்குகிறாள் போலிருக்கிறது!" என்றாள்.

ஸத்துகன் மெல்ல பத்திரையின் அருகில் சென்று அமர்ந்தான். அவள் முகத்தை மெல்ல எடுத்து தன் முகத்தோடு அணைத்துக்கொள்ளுமளவில் பத்திரை விழித்துக்கொண்டாள்; திடுக்குற்று எழுந்து உட்கார்ந்தாள். ஸத்துகனின் கைகள் பத்திரையை விடவில்லை. பத்திரைக்கு யாவும் கனவுபோல் இருந்தது சற்று நேரம் ஆயிற்று நினைவு வர. 'உண்மையில் இவர் என்னை இவ்வாறு அருகில் வந்து தழுவியது எத்தனை நாட்கள் இருக்கும்? இன்று எதிர்பாரா விதமாய் நிலவின் இனிமையில் இவ்வாறு வந்து தழுவுகிறாரே! இன்று இப் புதிய மாறுதலுக்குக் காரணம் என்ன?—' என்று முதலில் எண்ணமிட்டாள். ஆனால், அந்த நிலவின் வசீகர இன்பத்தில், காதலன் தோளோடு தோள் சேர்ந்திருக்கும்போது அந்த எண்ணம் நிலைத்து நிற்குமா? பத்திரை ஸத்துகன் வசமானாள். ஸத்துகனின் போக்கைக் கண்டு ஆச்சரியமும் வியப்பும் கொண்டாள். பழைய நிலைமையில் ஸத்துகன் பத்திரையுடன் பேச

(25-ம் பக்கம்)



# ஹாஸ்ய மஹா புராணம்

பி.ஸ்ரீ

## ஆதி மகாயுத்தம் அல்லது
# அமிர்தம் கடைந்த கதை

வியாஜ முனி விளம்புகிறுர்—ஆம், தம்முடைய மூட்டையில் உள்ளதை உள்ளபடியே. பேயாண்டிப் புராணிகர் கேட்டுக் கொண்டிருக்கிறுர்—அந்தப் புராண மூட்டையிலே கண்ணும், கதையிலே காதுமாக. கதையின் விஷயமோ, "உலகத்தின் ஆதி மகா யுத்தம்." வியாஜ முனிவரோ, தமது தாயாதிக்காரரான வியாஸ முனிவருக்கும், சுகப்பிரமத்திற்கும் ஒரு கடற்கரையிலே நடந்த சம்பாஷணையிலிருந்து கதையை ஆரம்பித்து விட்டார்:

### கடலும் கதையும்

"அப்பா! இந்தச் சமுத்திரத்தை யார் கடைந்தார்?" என்று கேட்டது குழந்தையான சுகப்பிரமம். வியாஸரோ, "சிருஷ்டியாகிய சமுத்திரத்திலே யுத்த அலைகளை ஏவி விட்டவர் யார்?" என்று யோசித்துக் கொண்டிருந்தார்.

"அப்பா! அப்பா! சொல்ல மாட்டாயா? இந்தக்கடலை ஏன் கடைந்தார்கள்? எத்தனை பேர் கடைந்தார்கள்? எப்படிக் கடைந்தார்கள்? எப்போது கடைந்தார்கள்? இப்போது அவர்கள் எங்கே போய் விட்டார்கள்?" என்றெல்லாம் கேள்விகளை அடுக்கிக் கொண்டே வந்தது சுகப்பிரமம். வியாஸர் திகைத்துப் போனுர்.

"கடைந்த நுரையும் அலையும் இன்னும் மாறவில்லையே!" என்று சுகப்பிரமம் கேட்டபோதுதான் மகரிஷிக்கு விஷயம் ஒருவாறு விளங்கலாயிற்று. "சரி: பர்ணசாலைகளில் ரிஷி பத்தினிகள் தயிர் கடைவதைப் பார்த்திருக்கிறது குழந்தை. முதல் முதல் கடலைப் பார்த்ததும், அந்த ஞாபகம் வந்து விட்டது!" என்று எண்ணினுர். "அடடா, என்ன மனுேபாவம்!" என்று வியந்தார்.

"யுத்தம் எப்படித் தோன்றியது உலகத்திலே? ஈச்வர சிருஷ்டியில் அதர்மம் ஏன் இருக்க வேணும்? அது ஏன் அலைமேல் அலையாக வந்து தர்மத்தை எதிர்த்துப் போராடிக் கொண்டேயிருக்க வேணும்?" என்றுகொஞ்சகாலமாகவே வியாஸர் யோசனை செய்து கொண்டிருந்தார். அந்தஞானியின் உள்ளமும், அந்த அலைபட்ட கடலைப்போல் பொங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கரைகாணுத கடலில் ஒரு தெப்பம் போலே—ஏதோ ஒரு மிதப்புக் கட்டை போலே—மிதந்து வந்தது குழந்தையின் மனுேபாவம். "இப்படிப்பட்ட மனுேபாவத்திலும் ஏதோ ஒரு தெய்விக உண்மை இருக்கத்தான் வேணும்!" என்று எண்ணமிட்டார் வேத வியாசர். குழந்தையின் மனுேபாவத்தை ஒருவாறு ஒத்தது தானே ஞானிகளின் மனுேபாவமும்?

பால்போன்ற அந்த வெண்ணிலவிலே, கடலும் பாற்கடல் போலவே தோன்றியது. ஆம், வியாஸர் கண்களிலும். அப்போது குழந்தை சுகப்பிரமம், "என்ன? அப்பா! இவ்வளவு பெரிய பாற்கடலை எவ்வளவு பெரிய மத்தைக்கொண்டு கடைந்தார்களோ?' என்று மறுபடியும் கேட்டது. அந்தக் கேள்விகளின் பயனுக வியாஸருள்ளத்திலே ஒரு கதை உருவாகத் தொடங்கியது.

"தர்மம் என்றுல் 'தேவ சக்தி, அதர்மம், 'அசுர சக்தி; தர்மத்திற்கும் அதர்மத்திற்குமுள்ள போராட்டத்தைத் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே தோன்றிய ஒரு போராட்டமாகக் கற்பிக்கலாம்" என்று எண்



ணிக்கொண்டே வியாஸர் சுகப் பிரமத்தைப் பார்த்து, "தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக்கடைந்தார்கள்" என்றார். "அவர்கள் ஒரு பெரிய மலையையே மத்தாகக் கொண்டு கடைந்திருக்க வேணும், அப்பா! ஆனால் அந்த மத்தைத் திருப்பித் திருப்பிக் கடையக் கயிறு வேண்டாமா? அவ்வளவு பெரிய கயிறு அவர்களுக்கு எங்கே கிடைத்தது? அப்பா!" என்று ஆச்சரியப்பட்டது சுகப்பிரமம். அந்த மனோ பாவத்தைத் தம்முடைய மனோ பாவத்தைக் கொண்டு திருப்தி செய்ய முயன்றார் வியாஸர்.

"அதர்மம் நிலையில்லாதது தான்; தர்மத்திற்கு அழிவில்லை, மரணமில்லை! மரணமில்லாத தன்மைக்கு அமிர்தம் என்று பெயர். தர்மம் என்ற தேவ சக்திக்கு அமிர்தம் கிடைத்து விட்டது. அதர்மமாகிய அசுர சக்திக்கு அது கிடைக்கவில்லை!" என்று சிந்தனை செய்துகொண்டே வியாஸர், "தேவர்களும் அசுரர்களும் மந்தரமலையை மத்தாகவும், வாசுகி என்ற மகா நாகத்தைக் கடை கயிருகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தார்கள். அப்படிக் கடைந்ததில் தேவர்களுக்கு அமிர்தம் கிடைத்தது. அசுரர்களுக்கு அது கிடைக்கவில்லை" என்றார். "தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பதுபோல், பாற்கடலைக் கடைந்து அமிர்தம் எடுத்தார்கள்!" என்று சுகப் பிரமம் அந்தக் கதையை ஆமோதித்தது.

## புயலும் விஷமும் விஷமமும்

கடல் வர வர அதிக இரைச்ச லிட்டது. காற்றினால் ஜலம் ஊஞ்சல்போல் அலைந்து மேலே கிளம்புவதும், நுரைத்துக் கொண்டே விழுவதுமாயிருந்தது. ஒரு சமயம் அலைகள் பெரிய பெரிய கைகளைப்போல் வேகமாக அசைந்தன. வேறு சமயங்களில் அவை ஏதோ ஒரு மகா நாகம் பெருமூச்சு விடுவது போலிருந்தன. அசுரர்கள் அலறுவதுபோலவும், கதறுவது போலவும் காணப்பட்டன; தேவர்கள் கூத்தாடுவது போலவும் தோன்றின. "இன்னும் கடைந்துகொண்டு தான் இருக்கிறார்களோ தேவாசுரர்கள்? எவ்வளவு வேகமாய்க் கயிற்றை இழுத்துச் சமுத்திரத்தின் வயிறு கலங்கக் கடைகிறார்கள்! அந்த வாசுகி என்ற மகா நாகத்தின் மூச்சுக் காற்ருே இப்படி வீசுகிறது?" என்ற கேள்விகள் பிறந்தன சுகப் பிரமத்தின் வாயிலிருந்து.

"புயல்-காற்று வீசும்போலிருக்கிறது" என்று ஊகித்த வியாஸர், "அப்படித் தேவாசுரர்கள் உத்ஸாகமாய்க் கடைந்து கொண்டிருக்கையில், திடீரென்று விஷக் காற்று வீசியது; ஆலகால விஷம் என்ற கொடிய மகா விஷம் உக்கிரமான வேகத்தோடு வந்தது. தேவர்களும் பிறரும் ஓட்டம் பிடித்தார்கள், சிவபெருமான் இருந்தஇடத்தை நோக்கி. நாமும் சிறிது தூரத்திலுள்ள ஒரு செம்படவ ரிஷியின் ஆச்ரமத்திற்கு வேகமாகவே போய் விடுவோம். அந்த ரிஷி மத்ஸ்யகந்தை என்ற உன் பாட்டியாரின் உறவினர். அங்கே கதையைத் தொடர்ந்து சொல்லுகிறேன். பரமசிவன் விஷத்தைப் பட்சித்தும், மகா விஷ்ணு அமிர்தத்தை அளித்தும், தேவர்களை ரட்சித்தார்களே; அந்தப் பாக்கிக் கதையையும், தேவாசுர யுத்தத்தையும் விவரிப்பேன்" என்றார்.

வியாஸர் சுகப் பிரமத்தைத் தூக்கிக் கொண்டு, ஜடையும் தாடியும் ஒழுங்கீனமாய்க் காற்றிலே பறக்க ஓடி, குறித்த ஆச்ரமத்தை அடைந்தார். அங்கே கேட்போருக்கு அமிர்தமாகும்படி கதையைச் சித்திரிக்கத் தொடங்கினார்.

சிவபெருமான் விஷ பட்சணம் செய்தார், தேவர்களை ரட்சிப்பதற்காக. கவலை கொண்ட உமா தேவியை நோக்கி, 'தேவியே! உயிர்களுக்கு இரங்கி எவன் தன் உயிரைத் தியாகம் செய்யத் துணிகிறானே, அவனே உயிருக்கு உயிராகிய கடவுளை உண்மையாக ஆராதிக்கிறவன்' என்றார் சிவபெருமான் என்று வியாஸர் கதையோடு கதையாய்ச் சொன்னார். அந்த ஆச்ரமத்தையே குருகுலமாகக் கொண்டு கல்வி கற்று வந்த ரிஷி குமாரர்களும் ராஜகுமாரர்களும், "யாகத்திற்கும் மேலானது தியாகம்" என்று தெளிந்தார்கள்.

கதையிலே வியாஸர் ஹாஸ்ய ரஸத்தையும் வேண்டிய அளவிற்குக் கலந்து கொண்டார். அவர் கதை சொல்லி வரும் போதே சுகப்பிரமம் குறுக்கிட்டு, "சிவபெருமான் விஷ பட்சணம் செய்து விட்டார் என்றால், பாம்பு தேள் முதலான விஷ ஜந்துக்களுக்கெல்லாம் விஷம் எப்படிக் கிடைத்தது?" என்று ஒரு கேள்வி கேட்டு விட்டது. அந்த மழலைச் சொற்களை அமிர்தமாகப் பருகிய வியாஸர் சிரித்துக்கொண்டே, "சிவபெருமான் ஆலகால விஷத்தை உள்ளங்கையில் அடக்கி வைத்துக் கொண்டு பட்சணம் செய்தார். அப்போது சில விஷத் துளிகள் சிந்திப்போயின. அவற்றைத் தேள்களும் விஷப் பாம்புகளும், மற்றுமுள்ள விஷ ஜந்துக்களும் வேகமாகவும் உத்ஸாகமாகவும் பங்கு போட்டுக் கொண்டன!" என்று உத்ஸாகமாகப் பதில் சொன்னார். சில தினங்களாக, வியாஸருடைய ஹாஸ்யமும், சிவபெருமானுடைய தியாகமுமே அங்குள்ளவர்களுக்கு நினைவும் கனவுமாயிருந்தன. கதை தொடர்ந்து நடக்கவில்லை.

## தியானமும், தரிசனமும்

செம்படவரிஷியின் ஆசிரமத்திலே வியாஸரும் சுகப் பிரமமும் பல தினங்கள் தங்கினார்கள். வியாஸர் நீண்ட நேரம் தியானத்தில் அமர்ந்

(23-ம் பக்கம்)

# சிற்பி சந்திரமோஹன்

எம். எஸ். கமலா

'சந்திரமோஹன்' இயற்கையாகவே நற்குணங்கள் படைத்தவன். காலக் கொடுமையால் கஷ்ட அலைகளில் சிக்கிண்டு, வேலையில்லாத் தொந்திரவில் அடிபட்டு, நற்குணத்தைப் போக்கடித்துக்கொண்டு முரடனானான். அழகுள்ள வாலிபன். அந்தோ! விதியின் விளையாட்டுகளில் ஈடுபட்டான். 'நீர் பூத்த நெருப்பு' அவன் நற்குணம் வெளிப்படும். நற்காலமும் வருமோ; அல்லது அவன் ஜீவிதமே 'விழலுக்கிறைத்த நீராகுமோ?'

"குமாரி சுகுணவதி" க்வீன் மேரீஸ் காலேஜில் பி. ஏ. இரண்டாம் வருடம் படிக்கிறாள். அன்று தலை வலியாக இருந்ததால் கல்லூரியை விட்டு வேகமாய் வீடு நோக்கி சென்றாள். செல்லும் வழியில் சந்திரமோஹன் மேல் கார் மோதுண்டது. அவன் நினைவற்று வீழ்ந்தான். பார்த்தாள் மங்கை. மனம் பொறாமல் மோஹனை எடுத்துக் காரில் போட்டுக்கொண்டு வீட்டிற்கு சென்றாள்.

சிந்தாதிரிப்பேட்டையில் "சுகுண விலாஸ்" என்னும் அழகிய மாளிகையில் வாயிற்புற அறையில் இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க ஓர் வாலிபன் தன் நினைவற்று பிதற்றிக்கொண்டிருக்கிறான். நாகநாத் ஒரு ஆட்டம் பிரிட்ஜ் ஆடலாம் வா! ஹல்லோ! சுந்தர்! நீயும் வா! போக்கர் ஆடலாம். ஏ! பாய்! 'எக்ஸ்டரா நம்பர் ஒன்' எடுத்து வா! என்று பற்பல விதமாய் பிதற்றிக்கொண்டிருந்தான். நெற்றியில் நல் முத்துக்கள் சிதறிக் கிடப்பது போல் வியர்வைத் துளிகள் மின்னுகின்றன. முகத்தில் சோர்வின் அசதிகசக்கிஎறிந்த புஷ்பத்தைப்போல் கன்னி இருக்கிறது. அவனருகில் சௌந்தர்யமே வடிவாய், துயர் மேகம் முகத்தில் கவிழ்ந்திருக்க சோக அனல் பெருமூச்சு த்வனியுடன் வெளி வீச நின்றிருந்தாள் பதினெட்டு வயது மங்கை ஒருத்தி. அச்சமயம் அவ்விடம் வந்த டாக்டர், "குழந்தாய்! ஏன் கவலைப்படுகிறாய்? இவ்வாலிபனுக்கு ஒன்றும் பயமில்லை. இன்னும் சில நாட்களில் நன்றாய் குணப்பட்டுவிடுவான். நீ பயப்படாதே, கலாசாலைக்கு செல்லவில்லையா?" என்றார்.

"இல்லை. நான் இனி செல்வதாயில்லை. இவர் படும் பாதைக்கு நானன்றோ காரணம். பாழாய்ப்போன மோட்டார் ஓட்டும் பெருமை ஓர் யுவகனின் ஜீவிதத்தையே பாழ்ப்படுத்தும் நிலைக்கு வந்துவிட்டது. இவர் தாய் தந்தையர் யாரோ? மகனை காணாமல் எப்படி வருந்துகிறார்களோ? அவர் படும் பாதையை கண்ணால் பார்த்து சஹிக்கக் கூடவில்லையே!"

"சுகுணா! நீ வருந்தாதே. இவ்வாலிபனை குணப்படுத்திக் கொடுக்க நான் என் சாமார்த்தியமனைத்தையும் உபயோகிப்பேன். நீ கொஞ்சம்கூட பயப்பட வேண்டாம்" என்று சொல்லி நோயாளிக்கு வேண்டியதை செய்து வெளிச் சென்றார் டாக்டர்.

## 2

சுகுணவதி கல்லூரிக்குச் சென்று மாதம் மூன்றாகிறது. சந்திர மோஹன் குணமாய்க் கொண்டு வருகிறான். சந்திரமோஹனின் தாய் தந்தையர் மகனின் இருப்பிடம் தெரியாமல் மூன்று மாதமாய் வருத்தத்துடன் காலத்தை போக்கிக்கொண்டு கவலைக் கடலில் ஆழ்ந்திருந்தனர். வித்தையும், புத்தியும், அழகும் அமைந்த தங்கள் அருமைப் புதல்வன் வேலை கிடைக்காமல், அக்கவலையால் வீடு தங்காமல் சுற்றத் தலைப்பட்டு, தன் நற்புத்தியை போக்கடித்துக் கொண்டு, முரட்டுத்தனமாய் முரடர்களுடன் சஹவாஸம் செய்துகொண்டு திரிந்துகொண்டிருந்தவன், அடியுடன் மூன்று மாதமாய் வீட்டிற்கு வராமற் போகவே அவர்களின் துயருக்கு அளவில்லாமல் போயிற்று. அவன் நண்பர்களும் அவனைக் காணாததால் அடிக்கடி அவனை வீட்டில் வந்து கேட்கத் துடங்கினர். பிள்ளையைக் காணாமல் வருந்தும் பெற்றோர்கள் தங்கள் பிள்ளை மாயமாய் மறைந்ததை நினைத்து நினைத்து உருகினார்கள்.

'சுகுணவதி' ஓர் பிரபுவின் ஏக புத்திரி. தாய் தந்தையற்றவள். தந்தையின் சஹோதரி (அத்தை) அவளுக்குத் துணையாய் அவளிடம் இருக்கிறாள். பெயருக்கேற்றாப்போல் சுகுணவதி நற்குண நற் செய்கைக்கே இருப்பிடமானவள். அத்தையும் அப்பெண்ணை அதிக அன்புடன் நடத்தி வந்தாள். அத்தையின் குமாரர்கள் இருவர். அவர்கள் 'சுகுணவதி'யை மணக்க ஆசையுள்ளவர்களாய் இருவரும் மணமாகாமல் இருந்தனர்.

அன்று வருடப் பிறப்பு. 'சுகுணவதி' வீட்டைச் சுற்றியுள்ள தோட்டத்தில் புஷ்பித்திருக்கும் புஷ்பங்களைப் பறிப்பதற்காக அதிகாலையில் எழுந்து காலைக் கடனை முடித்துக்கொண்டு தோட்டத்திற்குள் நுழைந்தாள். இரவு சந்திரனுக்குப் பயந்து தங்கள் போர்வையை இழுத்து போர்த்துக் கொண்டிருந்த சூரிய காந்திகள் தங்கள் நாயகன் தினகரன்

வரவே அத்திக்கு நோக்கி கலகல வென்று சிரிக்கத் தொடங்கின. பூஞ்சோலையே மனதிற்கு இன்பத்தை தரும் தன்மையுடையது. அதிலும் இளம் வெயிலில் இணையில்லா வர்ணங்களுடன் புஷ்பித்து கலகல வென்று சிரிக்கும் புஷ்பராஜக்களைக் கண்டால், பிரபஞ்ச ஆசையை விட்டு தபஸே பிரதானமாயிருக்கும் தவசிரேஷ்டர்களே மயங்கும் போது இயற்கை அழகைப் பருக ஆவலோடிருக்கும் யுவதி யுவர்களின் மனோபாவத்தை பற்றிச் சொல்ல வேண்டுமா?

'சந்திர மோஹன்' ஜன்னலுக்கருகில் சாய்வு நாற்காலியில் வீற்று, இளம் வெயிலையும் இன்னிசை குயில்களின் கீதங்களையும்,பனித்துளிகள்வைடூர்ய மணிகள் போல் மின்ன இளங்காற்றிலசையும் தருக்களையும் பார்த்தவாறு யோசனையிலாழ்ந்திருந்தான். அவன் அறையை வேலையாள் சுத்தம் செய்து கொண்டிருந்தான். ஜன்னலருகில் புஷ்பித்திருக்கும் புஷ்பங்களை பறிக்க சுகுணவதி அப்பக்கம் வந்தாள். அவள் வனதேவதையைப் போல் புஷ்பக் குவளையில் புஷ்பங்கள் எடுத்துக் கொண்டு விரிந்து தொங்கும் தலை மயிர் காற்றிலசைய குதித்துக் குதித்து புஷ்பங்களை பறித்துக் கொண்டிருந்தாள். சந்திர மோஹன் சுகுணவதியைக் கண்டதும் திக்பிரமைப் பிடித்தவன் போலானான். இவள் பெண்ணா அல்லது தேவதையோ? அருகில் வேலை செய்து கொண்டிருக்கும் வேலையாளை யழைத்து "அவளை யார்" என்று விசாரித்தான்.

"சாமி, அவுங்கத்தான் இந்த வீட்டு எசமானியம்மா, உங்களுக்குத்தெரியாதுங்களா? அந்த கொயந்தெதான் உங்களுக்கு ராப்பவலா கண்ணு முளிச்சு கயிஷ்டப்பட்டு மருந்து கொடுத்துக்கினு இருந்ததுங்க. பெரியம்மா சொன்னாலும் கேக்கல்லே. அந்தம்மாவே கட்டிக்குப் போறாங்களே அந்தய்யா வந்து சொல்லியும் கேக்கல்லீங்க. ராமா! நீங்கத்தான் என்னு பாடுபடுத்திப்புட்டீங்க போங்க! அது என்னவோ பாட்டில் கேப்பீங்க! அம்மா அதைவாங்கியாரச்சொல்லினு னெத்தான் அனுப்புங்க. வாங்கியாந்ததும் அதெ உடச்சி உங்க வாயிலே உடும். அப்புறம்தான் நீங்க படுப்பீங்க. கொய்ந்தெ காசு காசா பாக்கல்லெ, பணத்தை பணமா பாக்காதெ பச்ச தண்ணிப்போலெ செலவு செஞ்சதுங்க. இந்த மூணு மாச காலமா அது கயிஷ்டப் பாத்த கடவுளுக்கே எரக்கம் (இரக்கம்) தோணிச்சு, நீங்களும் நாலு நாளாய் பேசக்கொள்ள இருக்கீங்க" என்றான் வேலையாள்.

"ஆனால் நான் மூன்று மாதமாகவா படுத்திருந்தேன்?" என்று தன்னுள் தானே சொல்லிக் கொண்டு "உன் யஜமானி அவ்வளவு கஷ்டப்பட்டாளா? என்ன பாட்டில் வாங்கி வந்து கொடுத்தே? காண்பி."

உடனே வேலைக்காரன்'எக்ஸ்டரா நம்பர் ஒன்' விஸ்கீ பாட்டில்கள் வைத்திருந்த பீரோவைத் திறந்து காண்பித்தான். அதைப் பார்த்ததும் தலைகுனிந்து கண்ணீர் வடித்தான். தனக்காக இவ்வளவு கஷ்டப்பட்ட மாது ஏன் தான் சுய உணர்ச்சிபெற்ற பின் தன்னை வந்து பார்க்கவில்லை? தன் தாய் தந்தையர்கள் என்ன வருந்துகிறார்களோ? உடனே அவர்களைப் பார்க்க வேண்டும், தனக்காக எவ்வளவு பொருள் செலவு செய்திருக்கிறாளோ? தனக்கு வேலை கொடுத்து ஓர் இருபது ரூபாய் கொடுக்க இப்பரந்த உலகில் ஒருவராலும் இயலவில்லை. ஓர் சிறிய பெண் வெகு தாராள புத்தியுடன் பெருந்தன்மையாய் தனக்கு சிகித்சை செய்ததன்னியில், தான் விரும்பிய பான வகையையும் தாராளமாய் வாங்கி கொடுத்திருக்கிறாள். இதன் அர்த்தமென்ன? என்று சிந்தித்துக் கொண்டே அவள் புஷ்பங்கள் பறிக்கும் திக்கையே பார்த்துக்கொண்டிருந்தான். அவள் புஷ்பங்கள் பறித்துக்கொண்டு அவ்விடம் விட்டகன்றாள். சோலையே சூனியமாய் தோன்றிற்று. இளநகையுடன் கூடிய இளநங்கையும் மறைந்தாள். இளம் தளிர்களுக்கிடையிலிருந்த பூக்களும் மங்கையுடன் மறைந்தன. தினகரனும் தீக்ஷண்யமாய் வெளிவந்தான். இளைஞனும் வரண்ட உள்ளத்துடனும் வெறித்த பார்வையுடனும் தீர்க்காலோசனையிலாழ்ந்தான்.

(20-ம் பக்கம்)

# 'சொல்'



## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

தெய்வ சக்திகளை நம்முன் நிலைபெறச் செய்யும் சொல் வேண்டும். மனோ நிலையைத் தெரிவிக்கச் "சொல்" தானே முக்கியம்? சொல்லின் மூலமாகத் தானே மந்திர சக்தி உருவாகிறது? தந்தையார் எந்த விஷயத்தையும் லேசில் விட மாட்டார். "என்ன சொன்னால் சொல் வெற்றியடையும்?" "எந்தச் சொல்லினால் தேவரைக் கட்டலாம்?' அதாவது நாமும் தேவர்களாக ஆகி விடலாம்? தேவராவது என்றால் இறக்கை முளைத்து தேவலோகத்தில் வசிப்பவர் என்று அர்த்தமில்லை. பயனுடைய வாழ்க்கை வாழ்பவர் அமரர்கள் என்பது தந்தையாரின் சித்தாந்தம். பயன் பெற்ற வாழ்க்கையாது? அச்சத்தை அறவே நீக்கி துன்பக் கலப்பற்ற—மனதில் மாசகன்ற, பகைமையற்ற—அன்பு முதிர்ந்த வாழ்க்கை. இதை அடைய என்ன செய்வது? இதைப் பற்றி நாங்கள் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தோம். சரணாகதியடைந்து விட்டால் கட்டாயம் கடவுள் காப்பாற்றுவார் என்று தீவிரமாக நம்புபவர் ஆதலால் தேவர்களையே "எந்த விதம் சொல் வேண்டும் உங்களைப் புகழ" என்று கேட்கிறார்.

தேவர் வருக வென்று
சொல்வதோ?-ஒரு
செம்மைத் தமிழ் மொழியை
நாட்டினால்
ஆவலறிந்து வருவீர்
கொலோ? உம்மை
யன்றி யொரு புகலுமில்லையே.
'ஓம், என்றுரைத்து விடில்
போதுமோ? அதில்
உண்மைப் பொரு
ளறியலாகுமோ?
தீமை யணைத்து மிறந்
தேகுமோ?-என்றன்
சித்தம் தெளிவு நிலை
கூடுமோ?
"உண்மை யொளிர்க'
வென்று பாடவோ? அதில்
உங்கள் அருள் பொருந்தக்
கூடுமோ?
உண்மை யுடை யதொரு
சொல்லினால்-உங்கள்
வாழ்வு பெற விரும்பி
நிற்கிறோம்.
"தீயை யகத்தினிடை மூட்டு
வோம்"-என்று
செப்பு மொழி வலிய
தாகுமோ?
ஈயைக் கருட நிலை
யேற்றுவீர்-எம்மை
என்றும் துயரமின்றி
வாழ்த்துவீர்''
சொல்-கூறுகிறது.

"ஒலி உலகத்தில் எனக்கு கௌரவம் அதிகம். என்னைப் போல் பெருமை பெற்றவர் ஒருவரும் இல்லை. என்னை எழுத்தாளரும், பண்டிதர்களும் பலவந்தமாய் கொண்டு செல்கிறார்கள். நாள்தோறும் என்னை அழைக்க வருபவரின் கூட்டம் எண்ண முடியாது. சபைகளுக்கும் கூட்டங்களுக்கும் சென்று சென்று எனக்கு தூங்குவதற்கும் அவகாசம் கிடைக்கவில்லை. நான் "சொல்" இல்லாவிட்டால் ஒலி உலகில் எழுத்தாளரும், கவிகளும் என்ன பாடு படுவர்? இத்தனை பிரபுத்வ மடைந்தும் என் வாழ்நாளை—கதையை நான் இது வரை சொல்ல முன் வரவில்லை. உலகில் ஒரு சிறு உழைப்பாளரையும் எல்லோரும் அபரிமிதமாய் புகழ்கிறார்கள். ஆனால் என்னைப் பற்றி ஒருவரும் இது வரை ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. கவியரசன் பாரதி என்னைப் புகழ்கிறான். நான் மகிழ்வுடன் என் சுயசரிதையைக் கூறுகிறேன்.

நான் பிறந்த வருஷம் தெரியாது. எங்கள் மூதாதை ஆதிசேஷன். சுயேச்சையை விரும்புவேன். நான் கட்டுப்பட்டு வாழ விரும்பேன். தேகத்திற்கேற்ற மொழிவகுத்திருக்கிறேன். நான் ஏழை, பணக்காரன் உயர்வு தாழ்வு ஒன்றும் பார்க்க மாட்டேன். யாரையும் விரும்புவேன், மற்றோருக்கு உதவி செய்யாமல் இருக்கும் ஒவ்வொரு வினாடியையும் வெறுப்பேன். நான் சிறு எழுத்தாளரின் துயரை, பஞ்சத்தை நீக்குவேன் நான் கிருபை செய்யாவிடில் பிரஸங்கி எவ்விதம் வீழ்ச்சியடைவான் என்பதற்கு ஒரு உதாரணம் கூறுகிறேன். ஒரு பிரசங்கி எழுந்து நின்றார். தம் வித்தையைக் காண்பிக்க அநேக சாஸ்திரங்களை எடுத்துக் காட்ட முயன்றார். ஆனால் ஒரு சாஸ்திரத்தை படித்தவரன்று. கேள்வி ஞானம் மட்டும் சிறிது பெற்றவர். எழுந்து நின்றார். என்ன சொல்வது? கவலையில் வார்த்தை அவரது வாயினின்றும் வர மறுத்தன. சட்டைப் பித்தானைத் திருகுவதும் கைகுட்டையைப் பிரித்து மடிப்பதும், சுற்று முற்றும் பார்ப்பதுமாயிருந்தார். நெற்றியில் முத்து முத்தாய் வியர்வை துளித்தது. தாமரை போல் மலர்ந்திருந்த அவரது முகம் கூம்பியது.

நான் இதைக் கண்டு இரக்கமுற்று அவரெதிரில் நின்றேன். "கனவானே! உள்ளத்திலொளியுண்டாயின் வாக்கினிலே யொளியுண்டாகும். நல்ல சித்தத்தோடு ஆரம்பம் செய்யும் வெற்றியுண்டாகும்" என்றேன். என்னைப் பார்த்தவுடன் கனவானுக்கு உயிர் வந்தது. மனம் குளிர்ந்தது. அவருக்கேற்பட்ட பதட்டம் நீங்கிற்று. சிறிது நேரத்திற்கு முன்பு அவர் முகத்தில் படர்ந்த கவலையென்னும் மேகங்கள் எனது பிரவேசத்தினால் சிதறுண்டு மறைந்தன. உற்சாக மென்னும் சூரியன்

(19-ம் பக்கம்)

# என் பட்டு:

ஸ்ரீ எம். வி. பாலசுப்பிரமணியன்.

ஒரு நாள் பூராவும் ஆகாரமே இல்லாமல் பட்டினி இருக்க வேண்டுமென்றாலும் இருப்பாள் பட்டு. ஆனால் என்னை விட்டுப் பிரிந்து ஐந்து நிமிஷம் இருப்பதென்றாலும் அவளுக்கு மிகவும் கஷ்டம்தான். அவளுக்கென்னவோ என்னிடத்தில் அவ்வளவு அன்பு! அதைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? எனக்கும் அவளிடத்தில் ஒரு அலாதி ப்ரேமை. சேர்ந்தாப்போல் ஒரு மணி நேரமாக என்னைக் காணவில்லை என்றால் பட்டுவிற்கு கோபம் கோபமாக வரும். ஆனால் அவள் கோபப்பட்டு என்ன பயன்? அவள் கோபத்தை யாரிடம் காட்டிக் கொள்ள முடியும்? என் தாயாரோ வயதானவள். அவள் எங்கள் விஷயத்தில் அனாவசியமாகத் தலையிடவும் மாட்டாள். என் வரவை நோக்கி உள்ளுக்கும் வாசலுக்கும் அலைந்து கொண்டே இருப்பாள் பட்டு. என்னைக் கண்டாளோ இல்லையோ, அவள் கோபமெல்லாம் மாயமாய் மறைந்து விடும். அவள் கோபத்தை போக்கடிப்பதற்கு நான் கையாளும் வழியே வேறு. அது எங்களுக்குள் ஓர் ரகசியம்.

ஆனால் இன்று அவள் செய்த காரியத்திற்கு அவளுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும். கட்டி வைத்து நாலு அடி கொடுத்து "கழுதை, இனிமேல் இப்படி யெல்லாம் செய்யாதே, செய்யாதே" என்று சொன்னால்தான் அவளுக்குப் புத்தி வரும்.

முதல் முதலில் இன்றுதான் ஏதாவது பத்திரிகைக்கு ஒரு கட்டுரை எழுதலாமே என்று இங்கி பாட்டில், பேனா, பேப்பர் எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தேன். உட்கார்ந்தேனோ இல்லையோ, எங்கிருந்தோ, காக்காய்க்கு மூக்கில் வியர்த்தாப் போல் பட்டுவும் வந்து விட்டாள். "பட்டு, இதெல்லாம் நீ பார்க்கக்கூடாது, போ" என்று சொல்லிவிட்டு என் வேலையை தொடங்கினேன். ஆனால் அவள் என் வார்த்தையை கொஞ்சம் கூட மதிக்காமல் மேஜையின் மேல் ஏறி உட்கார்ந்துகொண்டு நான் எழுதுவதை யெல்லாம் பார்த்துக் கொண்டே இருந்தாள். நான் கட்டுரை எழுதுவதில்தான் அவளுக்கு எவ்வளவு சந்தோஷம்!

பாதி எழுதியிருப்பேன். 'பேபீ, காப்பியை குடித்து விட்டுப் போயேண்டா" என்று அம்மா கூப்பிட்டாள். எல்லாவற்றையும் அப்படியே வைத்துவிட்டு காப்பி குடிக்க உள்ளே சென்றேன். காப்பியை குடித்துவிட்டு திரும்பி வந்து பார்த்தால், நான் எழுதி வைத்திருந்த கட்டுரையின்மேல் இங்கிப்புட்டியை தள்ளி, இங்கியை யெல்லாம் கொட்டி அமர்க்களப்படுத்தி இருந்தாள் பட்டு. எனக்கு வந்த கோபத்துக்கும் ஆத்திரத்துக்கும் அளவே இல்லை. அவளை அப்படியே ஒரே அறையாக அறைந்து கொன்றுவிடலாமா என்று மனம் துடித்தது. துள்ளி எழுந்த ஆத்திரத்துடன் கையை ஓங்கிக்கொண்டு பட்டுவை அறையப் போனேன். என் அடியிலிருந்து தப்புவதன் பொருட்டு ஒரே தாவாகத் தாவி உள்ளே ஓடி விட்டாள் பட்டு. நானா விட்டுவிடுவேன். பின்னாடியே ஓடினேன், எங்கேயோ உள்ளே போய் ஒளிந்து கொண்டு விட்டாள் பட்டு. தேடித் தேடிப் பார்த்தேன். எங்கேயும் காணவில்லை. கடைசியாக "சமயற் கட்டில் அம்மா கிட்டப் போய் சரணடைந்திருப்பாள் பட்டு" என்று நினைத்துக் கொண்டு பக்கத்தில் சொருகியிருந்த விசிறிக் கட்டையையும் எடுத்துக்கொண்டு ஆத்திரத்துடன் சமயற் கட்டிற்குச் சென்றேன். நான் நினைத்தது சரிதான். பட்டு சமயற் கட்டில் அம்மாவிற்குப் பக்கத்தில் சாதுவாக நின்று கொண்டிருந்தாள்.

"அம்மாவிடம் போய் ஒளிந்து கொண்டால் விட்டு விடுவேன் என்று நினைத்தாயா, கழுதை...உன்னை இப்போது என்ன செய்கிறேன் பார்" என்று கத்திக் கொண்டே விசிறி மட்டையை ஓங்கிக் கொண்டு கிட்டே நெருங்கினேன். எமகிங்கரன் மாதிரி என்னைக் கண்டவுடன் பட்டு அப்படியே நடுங்கி ஒடுங்கிப் போய் விட்டாள். ஏதோ தப்பிதம் செய்து விட்டு அடிக்குப் பயந்து கொண்டு தன்னிடம் வந்து ஒளிந்து கொண்டிருக்கிறாள் பட்டு என்று அம்மாவிற்கு தெரிந்து விட்டது. நான் அப்போது இருந்த நிலைமையில் என்னைத் தடுக்காவிட்டால் பட்டுவின் கதி அதோ கதிதான் என்று தீர்மானித்து விட்டாள் அம்மா. என் கைகள் இரண்டையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு "வேண்டாண்டா பாவம், மன்னித்து விடுடா, பாவம். புள்ளைத்தாச்சி, ஒரு அடிகூட தாங்க முடியாதுடா வேண்டாண்டா" என்று சொல்லிக்கொண்டே என்கையிலிருந்த விசிறியைப் பிடுங்கி தூர எறிந்துவிட்டு என்னை திரும்பிப் போகும்படி வேண்டிக் கொண்டாள்.

"அதெல்லாம் முடியாதம்மா" என்று சொல்லிக்கொண்டே ஒரு உதறல் உதறி அம்மாவின் பிடியிலிருந்து என்னை விடுவித்துக்கொண்டு ஓங்கின கையுடன் பட்டுவை நெருங்கினேன்.

இனி தனக்கு வேறு கதியில்லை என்று தெரிந்து கொண்டு விட்டாள் பட்டு. அவள் கண்களிலிருந்து நீர் பலபலவென்று உதிர்ந்தது. பயத்தினால் தனக்கு வேறு வழியில்லை

(19-ம் பக்கம்)

# குறுக்கு தோப்பு காசிபிள்ளை



வ. ரா.



சில பெயர்களுக்குத்தான் அதிருஷ்டம். அவைகளை, உருச்சிதைக்காமல்,அப்படியே ஜனங்கள் உச்சரிக்கிறார்கள். மற்றும் பல பெயர்களை, ஜனங்கள் சித்திரவதை செய்தே தீர்த்து விடுகிறார்கள். ஸ்ரீநிவாஸன் என்ற பெயர் முதலிலே சீமாச்சன் ஆகிவிடுகிறது. பிறகு, அதுவே, சீமாச்சு; கடைசியாக, சீச்சு (பைத்தியக்காரன்) என்று முடிந்து விடுகிறது. இதைப்போலவே, கோமளம் என்ற அருமையான பெயரும். கோமளம், கோம்பளமாகமாறி, கோம்பிளி ஆகி, கடைசியாக, கோம்பா என்று ஜன்மம் எடுக்கிறது.

இலக்கணமும் தர்ம சாஸ்திரமும் 'பொதுஜன'த்து முன் பெயர் சொல்லவே முடியாது. அருமருந்து அன்ன (தேவாமிருதத்துக்கு ஒப்பான) என்று இலக்கணம் கண்டிப்பாய் சொல்லிற்று. ஆனால் பொதுஜனமோ, அதை ஏற்றுக்கொள்ளாமல், சுருக்கமாக 'அருமந்த' என்று முடித்துவிட்டது. லாகிரி வஸ்துக்களை உபயோகப்படுத்தக் கூடாது என்று தர்ம சாஸ்திரம் கரடியாக கத்திப்பார்த்தது. அது பலிக்கிற விஷயமா? நாடு முழுதும் புகையிலை சாகுபடி தான். தர்ம சாஸ்திரமும் இலக்கணமும் வெட்கித் தலை குனிய வேண்டியிருக்கிறது.

குறுக்கு தோப்பு காசி பிள்ளையின் கதியும் அனேகமாக இப்படித்தான். குறுக்கு தோப்பு என்பது எப்படியோ குடுக்கை தொப்பை ஆகிவிட்டது. காசி பிள்ளை, என்ன மாயமாயோ, காசுப்புள்ளே ஆகிவிட்டார். மொத்தத்தில் சேர்த்து சொன்னால், குறுக்கு தோப்பு காசி பிள்ளை, குடுக்கைத் தொப்பை காசுப்புள்ளே ஆகிவிட்டார் இப்ப? சொல் கொலை செய்யலாமா என்று என்னைப் பார்த்துக் கேட்டுப் பயன் என்ன? பொதுஜனம் என்பது சர்வாதிகாரியைக் காட்டிலும் கொடுங்கோலனைக் காட்டிலும் பிடிவாதமும் இறுமாப்பும் கொண்டதாகும். தான் 'மகாத்மா' இல்லை என்று காந்தி ஆயிரம் தடவைகள் சொல்லியாகி விட்டது. பொதுஜனம் கேட்டால் தானே? மகாத்மா தான் என்று பிடிவாதமாக, பொதுஜனம் காந்தியைப்பற்றி சொல்ல ஆரம்பித்து, அதை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டது.

குறுக்கு தோப்பு காசிபிள்ளை என்பவர் யார்? அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்? அவரைப்பற்றி, ஏன் இப்பொழுது பிரஸ்தாபம் செய்ய வேண்டும்? இந்த மாதிரி கேட்டுக் கொண்டே போகலாமல்லவா? குறுக்கு தோப்பு என்பது ஊர் அல்ல. ஊரின் ஒரு பகுதிக்கு, குறுக்கு தோப்பு என்று பெயர். குறுக்கு தோப்பிலே, மாமரங்களும் கொய்யா மரங்களும் அதிகம். இந்த தோப்பு, ஆதியில் சர்க்காருக்குச் சொந்தமாயிருந்தது. அதை அவர்கள் ஏலத்தில் விலைக்கு விற்கவே, காசி பிள்ளை வாங்கிக் கொண்டார். அன்று முதல் பிள்ளைக்கு, வீட்டிலே வாசம் கிடையாது. குறுக்கு தோப்பிலே தான் குடியிருப்பு.

பிள்ளைக்கு, இப்பொழுது, 'காடு வா வா' என்று அழைக்கிற காலம். வீட்டிலிருந்து காட்டுக்குப் போகு முன், ஒரு அஞ்சலாக, குறுக்கு தோப்பிலே இப்பொழுது வந்து தங்கியிருக்கிறார். பிள்ளை பால்ய முதல் விவசாயி. பயிர்ச்செலவில் மிகவும் சாமர்த்தியசாலி என்று பெயர் வாங்கியவர். பருவம் அறிந்து பயிர்ச் செலவு செய்வார். ஊருக்கு முந்தி, பயிர்செய்வார்; ஊருக்கு முந்தியே அறுவடையும் செய்து விடுவார். அவ்வளவு குறி, விவசாயத்திலே. இவர் பயிர் செய்யும் பண்டங்கள் எப்படியோ நல்ல விலைக்குப் போய்விடும். சந்தைக்கு, முதலிலே வருகிறது இவருடைய சரக்குத்தானே?

விவசாயம் தான் இவருக்கு முக்கிய ஜோலி. என்றாலும், தினசரி, இவர், ஏதாவது ஓலைச் சுவடியை வைத்துப் படிக்காமல் இருப்பதில்லை. இவருடைய மூக்குக்கண்ணாடி, எந்தக்காலத்தில் வாங்கினதோ! அதற்கு காதுபிடி இருக்காது. கயிறு கட்டியிருக்கும். இந்தக் கயிற்றை காது வழியாகக் கொண்டு போய் தலையைச் சுற்றிக் கொண்டு முறுக்கி விட்டு விடுவார். இவருக்கு வெள்ளெழுத்து மாத்திரமல்ல, கண்ணும் சிறிது பார்வை குறைச்சல்தான். எனவே, எப்பொழுதும் இவரை மூக்குகண்ணாடி சகிதமாகத் தான் தரிசனம் காணமுடியும்.

இவர் குறுக்கு தோப்பு ஏலம் கேட்க போகையில், விநோத சம்பவம் ஒன்று நேர்ந்தது. ஏல அதிகாரி, ஏலம் போட தயாராக இருந்தார். ஏலம் கேட்பவர்கள், குறிப்பிட்ட தொகையை, டிபாசிட்டு கட்ட வேண்டும் என்பது மாமூல். இந்த மாமூல், அநேகமாக நடை முதலில் இருந்ததில்லை. காசிபிள்ளை, ஏலம் கேட்க முன் வரவே, ஏல அதிகாரி, இவரை ஏற இறங்கப் பார்த்தார். 'நீ யாருங்காணும்? வேடிக்கை பார்க்க வந்திருக்கிறீரா' என்று கேட்டார். ஏலம் கேட்க வந்திருக்கிறேன் என்று பிள்ளை பதட்டமில்லாமல் பதில் சொன்னார்.

ஆளைப் பார்த்தால், அதிகாரிக்கு, மதிப்பு ஏற்பட வில்லை.

டிபாசிட் கட்டினீரா என்ருர் அதிகாரி. என்னை ஒருத்தரும் கேட்க வில்லையே என்ருர் பிள்ளை. 'சரித்தான் காணும்! சட்டம் பேசாதேயும்! போய், குமாஸ்தாவினிடம் மூவாயிரம் ரூபாய் டிபாசிட் கட்டி விட்டு வாரும்' என்று அதிகாரி படாடோபமாகச் சொன்னுர். பாக்கு கடிக்கிற நேரத்துக்குள், பிள்ளை, தொகையை கட்டி விட்டு, ஏல அதிகாரிக்கு முன்னே வந்து நின்ருர். 'பணம் கட்டியாச்சா' என்று அதிகாரி அதட்டினுர். ஆமாங்க என்று பிள்ளை சாவதானமாகச் சொன்னுர்.

பிள்ளை, விடாமல் ஏலம் கேட்டுக்கொண்டே வந்தார். இருபதினுயிரம் என்று ஒருவர் கேட்டார். 210'0 என்று பிள்ளை, உடனே ஆயிரம் ரூபாய் உயர்த்திக் கேட்டார். அதிகாரி திகைத்துப்போனுர். மறுபடியும் ஒருவர் 21500 என்று கேட்டார். பிள்ளையோ 24 00 என்று சொன்னுர். மீண்டும் கேட்பவர் இல்லை. பிள்ளைக்கு ஏலம் விடப்பட்டது. மூவாயிரம் டிபாசிட் போக, பாக்கி தொகையை, 21 நோட்டுகளாக (ஆயிரம் ரூ) மடியிலிருந்து பிள்ளை எடுத்து, அதிகாரியினிடம் கொடுத்தார். அதிகாரியின் உயிர் அப்படியே போய் விட்டது என்று சொல்லலாம். இவ்வாறு அவர் எதிர் பார்க்கவே இல்லை. பிள்ளை யாரோ ஒரு கிராமத்து சண்டைக்கார சண்டிப் பேர்வழி என்று அவர் நினைத்தார். உழைத்து, படாடோபமில்லாமல் பணக்காரன் ஆனவர் பிள்ளை என்பது அதிகாரிக்கு உதயமாகவே இல்லை.

குறுக்கு தோப்பை ஏலம் எடுத்து பத்து வருஷத்துக்குள், பிள்ளை போட்ட முதலை எடுத்து விட்டார். மாம்பழ விற்பனை, கொய்யா விற்பனை, புகையிலை சாகுபடி, காய்க்காத மரங்களை வெட்டி விறகாக விற்பது,—இவ்வாருக் செய்து, 24000 ரூபாயை பத்து வருஷத்துக்குள் ஒப்பேற்றி விட்டார். அவர் இருக்கும் குறுக்கு தோப்பு குடிசைக்கு, வீட்டிலிருந்து சாப்பாடு வந்து விடும். அமாவாசையன்றைக்கு மட்டும், வீட்டுக்குப் போய், குடும்பத்தாரோடு, போஜனம் செய்வார். அன்றைக்கும் சாப்பிடுகிற நேரம்தான், வீட்டிலே இருப்பார்.

அருணுசலக் கவிராயர் எழுதிய ராமநாடகம் படிப்பதில், பிள்ளைக்கு சலிப்பே ஏற்படுவதில்லை. ஏதாவது ஒரு காரியம் செய்ய எண்ணினுல், பிள்ளை, ராமாயணத்தில் கயிறு போட்டுப் பார்ப்பார். கயிறு போட்டு கண்ட பாட்டுக்கும் இவர் நினைத்துக் கொண்டிருந்ததற்கும், எப்படியோ சம்பந்தம் உண்டாக்கி விடுவார். சூர்ப்பனகை மூக்கு அறுபட்ட பாட்டு அகப்பட்டால், காரியம் பலிக்காது என்று தீர்மானம் கொள்ளுவார். அனுமான் சீதாப்பிராட்டியை தேடிச் சென்ருர் என்ற கட்டம் கிடைத்தால், காரியம் தாமதமாகப் பலிக்கும் என்று முடிவு கட்டிக் கொள்ளுவார். வாலி வதைபடலம் அகப்பட்டால், அவருக்கு குதூகலம். காரியம் உடனே சாயும் என்பார்.

யாராவது இவரோடு பேச வந்தால், வசனத்தில் பேச மாட்டார். ராமாயண பாடல்களிலிருந்து பொருத்தமானதைப்பாடி அதையே கேள்வியாகக் கேட்பார். கேட்டதற்கு ராமாயணக் கதையிலே அவர் பதில் சொல்வார். பிள்ளை சைவர்; என்ருலும் ராமனிடத்தில் அவருக்கு அபாரமான பக்தி. ராமன்தான் ஏழை பங்காளி என்பார். எவருக்கும் மனக்கசப்பில்லாமல் நடந்துகொண்டது ராமனைத் தவிர யார் என்று பிள்ளை வேகத்தோடு கேட்பார். குகனேடு பேசும்பொழுது, வாலியோடு தர்க்கம் செய்யும்பொழுது, ராவணனேடு போர் புரியும்பொழுது, ராமன், படாடோபமில்லாத மனிதனுகவே நடந்துகொண்டார். இவ்வாறு, பிள்ளை ராமனைப்பற்றி வர்ணிக்கத் துவக்கி விடுவார்.

சிவராத்திரி தினமும் ஸ்ரீராம நவமிதினமும் பிள்ளைக்கு, பூரண பட்டினி நாட்கள். அதிகாலையில் எழுந்திருந்து, நீராட்டம் செய்து விடுவார். குடிசையின் கதவை தாள் போட்டுக் கொள்ளுவார். தியானத்தில் அமர்ந்துவிடுவார். ஸ்ரீராமநவமி தினத்தன்று மட்டும் அவர் கண்ணீர் உகுத்தபடியே இருப்பார். வாய்விட்டு, அருணுசலக் கவிராயரின் பாடல்களைப் படிப்பார். 'ஏ! ராமா! உன் பெருமை யாருக்குத்தெரியும், அப்பா' என்று அடிக்கொருதரம் சொல்லுவார். கடைசியாக தனக்குத் தானே பேசிக்கொள்ளுவார்.

'ஏ! ராமா! நான் சொல்றேன்னு வருத்தப்பட்டுக்காதே! நீ சீதாப்பிராட்டியை காட்டுக்கு கர்ப்ப சமயத்தில் அனுப்பியிருக்கக்கூடாது. அன்னையை லங்கையிலிருந்து அழைத்து வரும்பொழுது, அக்கினி பிரவேசம் செய் என்று ராமா! நீ சொன்னதும் தவறு. வருத்தப் பட்டுக்காதே! என் ராமனிடம் நான் முறையிட்டுக்காமல் வேறு யார் முறையிட்டுக்கிறது' என்று அங்கலாய்த்துக்கொண்டே பேசிக்கொண்டிருப்பார்.

காசி பிள்ளை மறைந்துபோய் விட்டால், அவருக்குப் பின் அவரைப்போன்ற சிலாக்கியமான மனுஷனைப் பார்க்க முடியுமா? முடியவே முடியாது.

---

நோயற்ற வாழ்வு

# கீல் வாயுவுக்கு ஏற்ற பரிகாரம்

★

**பண்டித எம். துரைசாமி அய்யங்கார்**

ஆம்வாதம் என்னும் தோஷத்தினால் உண்டாகும் கீல் வாயுவென்ற நோய் பிணியாளிகளுக்குக் கடும் வேதனையை அளிப்பது. இவ்வியாதியால் வருந்திய நண்பர் ஒருவர் எனக்கு எழுதியுள்ள கடிதம் ஒரு கட்டுரையாக உபயோகிக்கக் கூடியதா யிருப்பதால், அவர் ஆங்கிலத்தில் எழுதியுள்ளவற்றை இங்கு வெளியிடுகிறேன். இவர் தோல் பதனிடும் தொழிற்சாலையில் ஈடுபட்டுள்ள ஒரு பெரிய வியாபாரி. அவர் எழுதியுள்ள விஷயம் பின்வருமாறு:—

“இப்பொழுது சுமார் ஐந்து வருஷ காலமாய் வாயு நோவால் வருந்துகிறேன். எனக்கு வயது 54. தேகப் பயிற்சி செய்த வழக்கமில்லை. ஆரம்பத்தில் பசியும் ஜீர்ண சக்தியும் மிகவும் ஒழுங்கீனமடைந்திருந்தது. பிறகு இடுப்பிலும், முக்கியமாய் கால் பெரு விரல்களிலும் கடுப்பும் வலியும் ஏற்பட்டது. ஆதியில் அஜீர்ணமும், வயிற்றுளைத்தலும், மலபந்தமும் உண்டாகி அதிகம் வருந்தினேன். ஏதோ மருந்துகள் உட்கொண்டதில் ஜீர்ணக் கோளாறு ஒருவாறு குறைந்து இரவில் படுத்துக் கொண்ட பிறகு கால் விரல்களில் கடும் வேதனையுண்டாகும். ஒவ்வொரு ஸமயம் விரல்கள் சில்லிட்டுப் போய், உடலில் நடுக்கமும் தோன்றி ஜ்வரக் குறிகள் காணும். பூட்டுகளில் உஷ்ணத்துடன் வெட்டுவது போன்ற வலியுண்டாகும். இவ்வித தொந்தரவுகள் மறுநாள் பகல் அல்லது இரவு வரையில் தொடர்ந்து, உடல் வியர்த்து வலி தணிவதுண்டு.

“கால் விரல்கள், முக்கியமாகப் பெருவிரல்கள் வாயு வலியேற்பட்டபோது உள்ளே நீர் பரவியதுபோல் தளதளப்பாகவும், வீக்கமுள்ளனவாகவும், அதிக சிவப்பாகவும் காணப்படும். பாதங்களின் மேல் நரம்புகள் புடைத்துக்கொண்டிருக்கும். இவ்விதம் இரண்டொரு நாள் இருந்து தணிந்த பின், மறுபடி சில நாட்களில் இதேவிதமான தொந்தரவுகள் காணும். இந்த நிலைமையில் தலைச்சேரியில் ஆஸ்பத்திரியின் தலைமை டாக்டரை வரவழைத்து இவ்விவரங்களைச் சொல்லி பரீக்ஷிக்கச் செய்தேன். அவர் இரண்டு நாட்களுக்கு ஒரு முறை ஏதோ மருந்து இஞ்ஜெக்ஷன் செய்து வந்தார். முதலில் ஐந்து இஞ்ஜெக்ஷன் செய்துகொண்ட பிறகு பதினைந்து நாட்கள் வலியும் வேதனையும் தணிந்திருந்து, அப்பால் மூன்றாம் வாரத்தில் முந்திய நோவை விட அதிகமாக ஏற்பட்டுவிட்டது. அதன் பிறகு அவர் செய்த இன்ஜெக்ஷன்களும், அவர் கொடுத்த வேறு மருந்துகளும் ஒரு குணமும் செய்யவில்லை.

“பிறகு என் வேதனை அடிக்கடி தாங்கக்கூடாததாய்விட்டது. அதற்கு முன்பு வாயு நோவு ஒரு தடவை தோன்றினால் அது இரண்டு நாள் இருந்து தானே தணிவடையும். இப்பொழுது-அதாவது வியாதி ஏற்பட்டு நாலு மாதங்களுக்கு அதிகமாய்விடவே— உடலெங்கும் பூட்டுகள் தோறும் சம்மட்டியால் அடிக்கப்படுவது போன்ற வலி நாலைந்து நாள் தொடர்ந்திருந்து இடையில் நாலைந்து நாள் தணிவடைந்து, மறுபடியும் உண்டாகி வருந்தச் செய்தது. மலையாளத்து வைத்திய முறைப்படி நவரைக்கிழி பிழிச்சல் முதலிய சிகித்ஸைகளை ஒரு மாத காலம் செய்துகொண்டேன். நவரைக்கிழி என்னும் சிகித்ஸை செய்துகொண்டபோது இவ்வலி மிகவும் அதிகரித்து விட்டது. அப்பொழுது மலையாள வைத்தியர்கள், ‘அது அப்படித் தான் அதிகரித்து அப்பால் சிகித்ஸை முடிந்த பின் தணிந்து குணம் ஏற்படும்’ என்றார்கள். அவர்கள் கூறிய விதம் ஒரு மண்டலம் (40 நாள்) பொறுமையுடன் பிழிச்சல் முதலியதையும் செய்து முடித்துக்கொண்டேன். வியாதி மாத்திரம் முடிவடையவில்லை. வீக்கமும் வலியும் பத்துப் பதினைந்து நாள் தொடர்ந்து வருந்தச் செய்தன. இடையில் இரண்டு மூன்று நாள் தணியும்; பிறகு மீண்டும் அதனால் உண்டாகும் வேதனை என்னை வாட்டி விட்டது.

“அதன் பிறகு கள்ளிக்கோட்டையில் ஒரு ஆங்கில வைத்தியரிடம் சிகித்ஸை செய்து கொண்டு வந்தேன். அவரும் இரண்டு வாரங்கள் மூன்று நாட்களுக்கு ஒருமுறை ஒரு இஞ்ஜெக்ஷன் செய்து வந்தார். மூன்றாம் வாரம் நோவுகள் தணிவடைந்தன. பிறகு சில மருந்துகளை அவர் எழுதிக் கொடுத்து இரண்டு மாதங்கள் அவற்றை உபயோகிக்க வேண்டுமென்று சொன்னதில், அவ்விதமே ஊருக்குத் திரும்பி வந்து அவற்றை உட்கொண்டு வந்தேன். இப்பொழுது ஒரு வாரமாய் மறுபடி கால்களிலும், கைகளிலும் பூட்டுகள் அசைக்க முடியாமல் வலியும் வீக்கமும் உண்டாகி நான் மிகவும் சங்கடப்படுகிறேன். தங்களைப்பற்றி நான் தங்கள் வைத்தியக் கிரந்தங்கள் மூலமாகவும், ‘மித்திர’னில் வெளியாகும் தங்கள் கட்டுரைகள் மூலமாகவும் விசேஷமாகக் கேள்விப்பட்டிருப்பதால், என் வியாதிக்குப் பரிஹாரம் தங்களால் ஏற்படக் கூடுமென்ற நம்பிக்கையின்

மேல் இக்கடிதத்தை எழுது கிறேன். விவரங்களை விஸ்தார மாகக் கூறி விட்டேன்.

இக்கடிதம் எழுதியவர் டி. பி. சி. என்கிற தலைச்சேரி யிலுள்ள கனவான். அவர் கடி தம் வரும்போது நான் லாகூரில் இருந்தேன். நான் சென்னைக்கு திரும்பி வந்து அவர் கடிதத் தைப் பார்ப்பதற்குள் மற் றொரு கடிதமும் அவர் எழுதி விட்டார். முடியுமானால் சென் னைக்கு வந்து என்னை நேரில் பார்ப்பது நலமென்று எழுதிய தில் அவர் நேரில் வந்து அவ ரைப் பரிசோதித்தேன். அவர் எழுதியிருந்த தகவல்களைப் படித்துவிட்டு, நீர் முதலியதை யும் பரிசோதித்து, வேறு சில விஷயங்களையும் தெரிந்து கொண்டேன். அவருக்கு மலம் தாராளமாய் இறங்குவதில்லை. வயற்றில் எப்போதுமே வாயு அதிகமாகச் சேருவது வழக்கம். நீர் வெகு சூடாகவும் மஞ்சள் அல்லதுசிவப்பாகவும்இறங்கும். அவருக்கு வைத்தியம் செய்த ஆங்கில ஆயுர்வேத வைத்தியர் கள் இவ்வுண்மையைப் பரி சோதித்துத் தெரிந்து ஏற்ற பரிஹாரம் செய்ய முயற்சி செய்யவில்லை. உணவு ஏற்ற வாறு ஜீர்ணமாகாமல் குடல் களில் வாயு சேர்ந்து ஆம தோஷம் என்ற விஷம் அவ் வாயு மூலமாகச் சரீரத்தில் சேர்ந்து விடுவது வழக்கம். மேலும் மலச்சிக்கலாலும் அவ் விஷம் உடலில் அதிகரிக்கும். இவ்விஷங்கள் இரத்தத்தில் அதிகமாகச் சேர்ந்திருந்ததாலே யே அப்பிணியாளிக்குஇறங்கும் நீரும் மஞ்சள் அல்லது சிவந்த நிறமாகவும் அதிக சூடாகவும் இருந்தது. இவ்விஷத்தை வெளிப்படுத்தவும்மேன் மேலும்உண்டாகாமலிருக்கவும் ஒருபரிஹாரமும் ஒரு வைத்திய ரும் செய்யவில்லை யென்றும், அதனால்தான் வியாதிக்குப் பரிஹாரம் ஏற்படவில்லை யென்றும் தீர்மானித்து, என் யோசனைப்படி அவருக்கு சிகித்ஸை செய்ய முயன் றேன்.

மலாசயமென்கிற மலக்குடலி லிருந்து வெளிவரவேண்டிய மலாம்சங்களும், மூத்திரமார்க் கத்திலிருந்து வெளியாகவேண் டிய கழிவுப்பொருள்களும் அவ் வன்றைக்கு நன்றாக வெளியாய் விட்டால் வயிற்றில் வாயுவும் மூத்திரத்தில் விஷ உப்புகளும், இரத்தத்தில் ஆமவிஷமும் சேர மாட்டா. முதலில் அவருக்கு ஸைந்தவாதிகஷாயம் கொடுத்து தாராளமாக விரேசநம் (பேதி) செய்வித்த பிறகு, மூத்திர மார்க்கத்தைச் சுத்தி செய்ய வஸ்தி சோதந சூர்ணம் வேளைக்கு 12 குன்றுமணியளவி லும், இரத்த சுத்திக்கு அயஸ் காந்த ஸிந்தூரம் சாப்பாட் டிற்குப் பிறகு வேளைக்கு ஐந்தாறு குன்றுமணியளவிலும் தினத்திற்கு மூன்று முறையாக உட்கொள்ளச் செய்தேன். பிறகு நான்கு தினங்களுக்கு ஒரு முறை காலையிலும் இரவில் படுக்கப்போகையிலும் வேளை க்கு நாலு மாத்திரை வீதம் ஸ்ரம்ஸநவடியையும் கொடுத்து வந்ததில் இரண்டு வாரத்தில் வெகு திருப்திகரமாக வலியும் வீக்கமும் தணிந்து விட்டன. ஒரு வாரம் அரிசியையும், புளி காரங்களையும் நிறுத்தி விட்டு, வாற்கோதுமைக்கஞ்சி,ரொட்டி பால், கிச்சிலிப்பழம் இவற்றை யே முக்கிய உணவாகவும் உபயோகித்துவந்தார். இரண்டு வாரம் கழித்து அடியிற் குறிக் கப்படும் மருந்துகளை ஊருக்குப் போய் ஒரு மாதம் உபயோ கித்து விட்டு, அதன் பின் உள்ள குண குணங்களை எழு தச் சொல்லி அவரை அனுப்பி விட்டேன்.

(1) விடங்காரிஷ்டம். இதை வேளைக்கு அரை அவுன்ஸ் வீதம் (2) மஹா யோக ராஜகுக்குலு 3 மாத்தி ரையுடன் தினத்திற்கு மூன்று முறை உட்கொண்டு வர வேண டும். (3) ஐந்து நாட்களுக்கு ஒரு தடவை 3 அல்லது 4 மாத் திரை ஸ்ரம் ஸநவடியைச் சாப் பிட்டு வர வேண்டும். ஒரு மாத காலம் இம் மருந்துகளை உப யோகித்த பின், இவ்வாறு நம க்கு எழுதியிருக்கிறார்.

"தங்களுடைய கூர்மையான பரிசோதனையினாலும், வியாதி யின் தன்மையைப் படுத்துணர் ந்து தாங்கள் கொடுத்த ஔ ஷதங்களாலும், கடைசியாக ஒரு மாத காலம் என் ஊருக்கு வந்து தங்கள் அபிப்பிராயப் படி ஔஷதங்களை உட் கொண்டு, பத்திய முறைகளை யும் அனுஸரித்து வந்ததில் நான் முற்றிலும் சுகமாயிருந்து வருகிறேன். தாங்கள் கூறிய முறைப்படி ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் சுமார் இரண்டு மைல் தூரம் சுறு சுறுப்பாகவும் நடந்து வருகி றேன். வியாதியால் ஐந்து வரு ஷத்திற்கு அதிகமாய் அவஸ்த் தைப்பட்ட பிறகு இது கடுமை யான ஆமவாத ரோகம் (ஆங் கிலத்தில் கௌட் அண்ட் மோடிஸம்) என்றும், அதற்கு ஏற்ற ஔஷதங்களும் பரிஹார முறைகளும் இவையென்றும் நான் தெரிந்து கொள்ளவும், அத்துன்பத்திலிருந்து முற்றி லும் நீங்கவும் செய்ததற்காகத் தங்களுக்கு வந்தனமளிக்கி றேன்."

ஆமவாதம் என்ற இவ் வாயுவுக்கு ஏற்ற காலத்தில் முற் கூறிய முறையில் பகுத் தறிவுடன் சிகித்ஸை செய்ய இக் கடித ரூபமான கட்டுரை பலருக்கு உதவக் கூடுமெனக் கருதி இதை வெளியிட்டேன்.

—::—

## 'சொல்'

(13-ம் பக்க தொடர்ச்சி)

அவர் முகத்திலுதித்தான். இனியென்ன? பிரசங்கம் காளமேகம் பொழிந்ததுபோல் செய்தார்...இடைவிடாத கரகோஷம்! காது செவிடுபடி நடந்தது.

நான் மூடர்களை வித்வானுக்குவேன். யுக்தி தெரியாதவர்களுக்கு யுக்தி சொல்வேன். எழுத்தாளருக்கு மனோபாவத்தை உணர்த்தும் "சொல்" அகப்படாவிட்டால் உடனே அதைச் சொல்வேன். கவிஞர்களுக்கு உவமை கூறுவேன். அரைகுறையான வேலையைப் பூர்த்திசெய்வேன். நான் இல்லாவிடில் உலகேது? என்னுல் தெய்வ சக்தி மனிதன் வாக்கில் ஏற்படுகிறது.

"ஊருக்கு நல்லது
சொல்வேன்—எனக்
குண்மை தெரிந்தது
சொல்வேன்"

---





## என் பட்டு

(14-ம் பக்கத்தொடர்ச்சி)

என்று தீர்மானித்து அப்படியே மல்லாந்து கீழே படுத்து கால்களை தூக்கிக்கொண்டு வாலையும் ஆட்டிக் "நான் புள்ளைத்தாச்சி. உன் அடி ஒன்றைக்கூட என்னுல் தாங்கமுடியாதே" என்பதுபோல் பரிதாபமாக "ளொள், ளொள்" என்று குரைத்துக்கொண்டு என்னையே உற்று நோக்கினுள்.

அவளுடைய பரிதாப நிலைமையைப் பார்த்தவுடன் என் மனம் இளகிவிட்டது. என் கோபமெல்லாம் பறந்து விட்டது. "என் பட்டு, என் கண்ணே!" என்று சொல்லிக்கொண்டே அடிக்க ஓங்கின கையால்அவளை அணைத்துக் கொண்டேன். என் மனமாற்றத்தைக் கண்ட பட்டுவும் ஒரே தாவலாக என் மடிமேல் தாவி விழுந்து பழயபடி சல்லாபம் செய்ய ஆரம்பித்து விட்டாள். "அவள் என் பட்டு...ராஜாபாளையத்திலிருந்து வந்தவளல்லவா?"

---

## சிற்பி சந்திரமோஹன்

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

### 3

மாலை ஐந்துமணி இருக்கும். சந்திரமோஹன் தட்டுத்தடுமாறி சுவரைப் பிடித்துக் கொண்டு எழுந்தான். அறையை விட்டு வெளி வந்தான். ஹாலில் வீற்று ஏதோ படித்துக்கொண்டிருந்த 'சுகுணவதி' காலடி ஓசையைக் கேட்டு நிமிர்ந்து பார்க்கவே, நடக்க சக்தியற்று சந்திரமோஹன் அதிககஷ்டத்துடன் வருவதைப் பார்த்து எழுந்து அவன் கையை பிடித்து அழைத்து வந்து ஓர் ஸோபாவிலமரச்செய்து "உங்களுக்கென்ன வேண்டும்? ஏன் எழுந்து வந்தீர்கள்? எக்ஸ்ட்ரா நம்பர் ஒன் கொஞ்சம் பருகுகிறீர்களா?" என்று கேட்டு ஓடோடியும் சென்று ஓர் கோப்பையையும் பாட்டிலையும் எடுத்து வந்து அவனுக்குக் கொடுத்தாள். அதை கை நீட்டி வாங்கும் போது அவன் உடல் சிறிதே நடுங்கிற்று. கண்களில் நீர் சோர்ந்தது. குரல் தழு தழுக்க "மங்கையே! வந்தனம்! எனக்கிது தேவையில்லை. இன்றுடன் என் துற்பழக்கங்கள் அகன்றன. என் உள்ளம் தூய்மை யடைந்தது. நான் என் தாய்தந்தையரைப்பார்த்து வருகிறேன். இவ்வளவு நாட்கள் உனக்கு சிரமத்தைக் கொடுத்ததற்கு மன்னிப்பாய். மாதே! என்னைப் போன்ற துஷ்டன் யாருமே இருக்க மாட்டார்கள். என்னை நல்வழிப் படுத்தினால் தேவி! உன்னை என்றும் என் ஹிருதய குஹரத்தில் வைத்து புனிதமாய் பூஜிப்பேன். நான் இன்றுடன் தூய்மையடைந்தேன்" என்று நாத்தடுமாற சொன்னான்.

அவன் கையிலிருந்த கோப்பையை வாங்கிக் கொண்டு வேலையாளை அழைத்து தேயிலைப் பானம் எடுத்து வரும்படி உத்திரவிட்டு "அய்யா! உங்களுக்கு இதன் மேல் இவ்வளவு வெறுப்பேற்பட்டிருந்தால் அருந்த வேண்டாம். என்னால் உங்களுக்கு இக்கதி நேர்ந்ததால் உங்கள் மனதிற்கோ சரீரத்திற்கோ கஷ்டம் உண்டாகச் சகியாமல் உங்களுக்கு வேண்டியதை உங்கள் மனத்திருப்திக்காக கொடுத்தேன். நான் செய்த தீங்கை என் ஆயுளுள்ள மட்டில் மறக்க மாட்டேன், என்னை மன்னிப்பீர்களா?" என்ற துக்கம் தொண்டையை அடைக்க கை குவித்து கேட்டாள். அவள் ரூபத்திற்குமேல் உயர் குணத்தையும் பணிவையும் பார்த்து வியந்த சந்திரமோஹன், "தேவி. செய்த தவறு ஒன்றுமில்லை. நிலை கலங்கியிருந்த என் புத்தியை நிலைக்கு கொண்டு வந்தாய்" என்றான்.

தேயிலைப் பானம் அருந்திய பின் அவன் வரலாறு முழுதையும் அறிந்து கொண்டு அவனை அவன் இருப்பிடம் அழைத்து சென்று விட்டாள். அவ்விடம் வயோதிகர்களான அவன் தந்தையர் புத்திர சோகத்தால் குன்றி ஆனந்த மற்று அழுது கொண்டு பறவைகள் போல் கதறும் காட்சியைப் பார்த்து மனம் பொறுமல், தன்னுடைய செய்கையால் அக்குடும்பம் படுங் கஷ்டத்தை பார்க்க சஹியாமல் சந்திர மோஹன் காரில் மோதுண்டது முதல் அன்றையவரை நடந்ததைச் சொல்லி பெரியவர்களிடம் மன்னிப்பை பெற்று தன்னில்லமடைந்தாள் யுவதி.

மறுநாள் காலை எழுந்ததும் சந்திர மோஹன் வீட்டிற்கு அவர்கள் செலவிற்கென்று ரூ. 200 கொடுத்தனுப்பி டாக்டரை அவர்கள் வீட்டிற்கனுப்பி அவனுக்கு நன்றாய் குணமாகும் வரை பார்க்கும்படி உத்திர விட்டாள். சந்திர மோஹன் தன்னில்லம் விட்டகன்றதும் ஏதோ ஒன்றை போக்கடித்து கொண்டவன் போல் வருந்தினான்.

### 4

சந்திரமோஹனுக்கு இந்நாள் வரை சாந்தி என்பதில்லை. அல்லல் பட்டு அலைந்தான். இப்பொழுது உற்சாகமென்னும் சுழல்காற்றால் சுற்றப்

பட்டு சாந்தியுடன் ஓர் நிலைக்கு வந்தான்.

சந்திரமோஹன் சித்திரங்கள் வரைவான். ஆனால் அதை கொள்கையில் அனுஷ்டிக்கவில்லை. தற்சமயம் தன்னை நல்வழிப்படுத்திய நல்லாளை சித்திரம் தீட்ட தன் சக்தியை முழுதும் பிரயோகித்தான். தான் முதலில் பூஞ்சோலையில் அவளை புஷ்பக்குடலையுடன் கண்ட காட்சியை வெகு அழகாய் எழுதி அதற்கு ஆத்ம பிரகாசம் என்று பெயரிட்டான். மற்றொன்று சுகுணவதி எக்ஸ்ட்ரா நம்பர் ஒன் கோப்பையில் வைத்துக் கொண்டு தன்னிடம் கொடுக்க வந்தது. அது ஞானோதயம். உண்மையில் ஞானோதயம். மோஹினி அமிருதத்தை வைத்துக் கொண்டு அசுரர்களை வா! வா! என்றழைத்து தேவர்களுக்கு ஞானத்தை ஊட்ட காத்திருந்ததைப் போன்று தான் இருந்தது. ஆத்ம பிரகாசத்தின் அழகோ அதியற்புதம். அக்காவத்தில் சுந்தோபசுந்தர்களை மயக்க வந்த மாயை சுந்தரி தானோ எனும்படி இருந்தது. அவ்விரண்டு சித்திரங்களும் அவ்வளவு அழகாய் இருந்தன. உயிருள்ள உருவத்தை கூண்டிற்குள் அடைத்து வைத்ததைப் போல் அதில் ஜீவகளை துள்ளி விளையாடுகிறது. அவ்விரண்டு சித்திரங்களையும் பூஜைசெய்ய தலைப்பட்டான். அன்றைய தினத்திலிருந்து சித்திரங்கள் தீட்டி அதில் வரும் சொற்ப பணத்தால் கௌரவமாய் காலத்தை கடத்திக் கொண்டு வந்தான்.

சுகுணவதி அன்புத் தெய்வம். அன்புப் பணியால்தான் அதமனான சந்திரமோஹனை நல் வழிப்படுத்தினாள். கோயில் குளங்களை விட மனிதர்களை நல்வழிப்படுத்துவது அன்பு ஒன்றுதான். எந்த இடத்தில் அன்பு விளக்கு எரிகிறதோ அந்த இடத்தில் அருவிருப்பென்னும் இருட்டு அகன்று விடும். அந்த இடத்தில் தான் வாஸ்தவமான கோயில் இருக்கும். எங்கு தயை தேங்கி நிற்கிறதோ அதுதான் உண்மையான வற்றாதகுளம். அன்பு, தயை இவ்விரண்டும் இருக்குமிடமே உண்மையான கோயில். அக்கோயில் சுகுணவதி.

சந்திரமோஹன் நினைவற்றிருக்குங்கால் அருவருக்கத்தக்க சொற்களை உச்சரித்தாலும் அதை அவள் பொருட்படுத்தாமல், அவன் பக்காகுடியனாய் குடித்தாலும் சட்டை செய்யாமல் அவனுக்கு அன்பாய் உபசரித்தாள். அவள் அன்பென்னும் ஆத்மசக்திக்கு முன் அவன் துர்ப்பழக்கங்கள் நில்லாமல் ஓடிவிட்டன. அவளோ வெனில் அவன் அழகான முகத்தையும் இனிமியைத்தரும் குரலோசையையும் அதிகமாய் விரும்பினாள். இன்பத்தில் ஆசை கொள்வது மனிதனின் இயல்பு. ஒவ்வொரு ஜீவனும் தன்னையும் அறியாமல் பிணைக்கும் விலங்குகளில் சிக்குண்டு துன்பம் தரும் சம்சார வாழ்க்கையை இன்பம் தரும் பேரானந்தமாய்க் கருதுகிறது. சுகுணவதியும் ஓர் பெண் தானே? அவள் மனமும் இயற்கையாய் வாழ்க்கைக்கு விதிக்கப்பட்ட வழியை நோக்கி சென்று, புலன்களை நோக்கி சென்றுகொண்டிருந்தது. அவள் கற்பனையிலேயே தன் பொழுதை கழிக்கலுற்றாள். பெண்மை என்றாகிலும் வெளிப்பட்டுத்தானே ஆக வேண்டும்? அத்தை குமாரர்களைப் பார்க்கவும் வெறுத்தாள். சந்திரமோஹனுக்காக உயிரையும் கொடுக்கத் தயாரானாள்.

## 5

நாட்கள் என்னும் இதழ்களால் மூடப்பட்டு மாதங்களென்னும் மொக்குகள் காலகர்ப்பம் என்னும் செடியில் ஒவ்வொன்றாய் விட்டுகொண்டிருந்தன. நினைவும் சிந்தனையும் சேர்ந்து மலர்கள் அலர்வதை ஆர்வத்துடன் பார்க்கத் தொடங்கியது. சில நாட்களுக்குப் பின் சுகுணவதி சந்திரமோஹனைக் காண அவன் இல்லம் நோக்கி சென்றாள். சந்திரமோஹன் எங்கோ சென்றிருந்தான். விருத்த தம்பதிகள் சுகுணவதியின் உயர் குணங்களை சொல்லிக்கொண்டு அவளால் தங்கள் மைந்தன் நல்வழிபட்டதையும் நினைந்து பேசிக்கொண்டிருக்கும் போது, சுகுணவதியே தங்கள் முன்பு இளைத்து துரும்பாய் நிற்பதைப் பார்த்து "குழந்தாய்! ஏன் இப்படி இருக்கிறாய்? உடம்பிற்கென்ன?" என்று ஆவலோடு விசாரித்தனர். அவள் தன் சித்திரங்களைப் பார்த்து திகைத்து நின்றாள். தன்னை சமாளித்துக்கொண்டு "நான் உங்கள் பிள்ளையைப் பார்க்க வந்தேன். அவர் எங்கே?" என்று கேட்டுக்கொண்டிருக்கும் போதே "ஏன் தேவி!" என்று கேட்டுக் கொண்டே சந்திரமோஹன் உள் நுழைந்தான். அவன் சொற்கள் காதில் விழுந்ததும் அவளை ஆனந்தத்துடன் உற்றுப் பார்த்தவாறே உங்களைப் பார்க்கவேண்டும் போல் தோன்றிற்று. வந்தேன். உங்களுக்கு கடிதம் எழுதி எங்கள் வீட்டிற்கு வரவழைக்கலாமா? என்று யோசித்தேன்.

"ஏன் எழுதி யனுப்புவது தானே! வந்திருப்பேனே! தேவியின் உத்திரவிற்கு மறுத்துச் சொல்வேனா? நீங்கள் என் தேவி. நான் உங்கள் பக்தன்... என்று சொல்லும்போதே "அப்பேர்ப்பட்ட சொற்கள் சொல்ல வேண்டாம் நான்...தான்...உங்கள்..."அதற்குமேல் சொல்லத் தைரியம் வரவில்லை. சற்று நேரம் ஏதோ பேசியிருந்து வீடு சென்றாள்.

கசடனை காதலித்தாலும் கன்னியர்கள் தங்களால் ஆனமட்டும் அவர்களுக்கு சஹாயம் செய்வார்கள். சுகுணவதியும் தனக்குத் தெரிந்தவர்களிடம் சொல்லி சந்திரமோஹனுக்கு மென்மேலும் வேலைகொடுத்து வந்தாள். சித்திரம் வரையத் தொடங்கிய பின் சந்திர

மோஹன் எங்கும் செல்வதில்லை. சற்று ஓய்வு கிடைத்தால் மனமார சுகுணவதி படத்தை பூஜிப்பான் சுகுணவதி சந்திரமோஹனை காதலித்து ஏங்கி ஏங்கி படுக்கையில் படுத்தாள்.

கவியின் கண்களும் கலைஞனின் கண்களும் காதல் உலகிற்கும் அப்பால் சென்று அவர்கள் மனதை இயற்கையுடன் வீனமடைய செய்கிறது. அதை யறியாமல் குட்டிச்சுவரில் முட்டிக்கொள்வதைப் போல் எத்தனையோ பேர்கள் தங்கள் வாழ்க்கையை பாழ்படுத்திக் கொள்கிறார்கள்.

## 6

அவ்வருடம் அகில இந்திய சித்திரக்கலைப்போட்டி. சித்திரக்காரர்கள் தங்கள் சித்திரங்களை அனுப்பிக் கொண்டிருந்தார்கள். இவ்விஷயம் படுக்கையில் படுத்திருக்கும் சுகுணவதிக்கு தெரிந்தது. பெண்களின் ஆசயங்களில் முக்கியமானது தங்கள் காதலர்கள் கீர்த்தி சிகரங்களில் அதிரோஹிப்பதை பார்ப்பது. இது வரை சந்திரமோஹன் அதில் சேரவில்லை என்று தெரிந்தது. இன்னும் இரண்டு நாள் இருக்கிறது முடிவுத்தேதி. ஒருஆளையனுப்பி சந்திர மோஹனை வர வழைத்தாள். அவன் வந்து சுகுணவதியைப் பார்த்ததும் திடுக்கிட்டான். "தேவி! உனக்கென்ன உடம்பிற்கு? ஏன் இத்தனை நாள் எனக்கு சொல்லியனுப்பவில்லை?" என்று துக்கத்துடன் கேட்டான். சுகுணவதி அவனை அழைத்த காரணத்தை சொல்லி அவனை அன்றே சித்திரங்களை போட்டிக்கு அனுப்பச் சொன்னாள். அவன் அதற்குச் சம்மதிக்கவில்லை.

"எனக்காக என் அன்பிற்காக, என் ஆசையை தீர்ப்பதற்காக சேரமாட்டீர்களா? என்று பரிதாபமாய் பரிவுடன் கேட்டாள்.

"தேவி! ஆக்ஞையின்படி" என்று சொல்லி சற்று நேரமிருந்து வீட்டிற்கு சென்று தாய் தந்தையரிடம் சுகுணவதியின் நிலைமையை விவரித்து கவலையுடன் வீற்றிருந்தான். இரவு எல்லோரும் படுத்த பின் "ஆத்ம பிரகாசம்" "ஞானோதயம்" என்னும் இரண்டு சித்திரங்களையும் மறுபடியும் வரைந்து மறு நாள் மாலை சித்திர போட்டிக்கு அனுப்பினான். அன்றும் சுகுணவதியை பார்த்து வந்தான். ஏனோ இவன் மனதில் சங்கட அலைகளும். குழப்ப இரைச்சலும், துக்க ஊற்றும் சுழன்று சுழன்று பூகம்பம்போல் அதிர்ச்சியை கொடுத்தது.

## 7

சித்திரப் போட்டியின் முடிவு பத்திரிகைகளில் வெளிவந்தது. அதில் ஆத்ம பிரகாசம் 'ஞானோதயம்' இவ்விரண்டிற்கும் முதல் பரிசு ரூபாய் பத்தாயிரம் கிடைத்தது. எப்பத்திரிகையில் கண்டாலும் சந்திரமோஹனின் புகைப்படமும் இவ்வானந்த செய்தியும் வெளிவந்திருந்தன. அதைப் பார்த்த 'சந்திரமோஹன்' ஓடோடியும் சுகுண விலாசத்திற்கு வந்தான். இவனுக்கு முன்பே இவ்விஷயத்தில் சிரத்தையுடனிருந்த 'சுகுணவதி' பத்திரிகையைப் பார்த்ததும், தன் காதலனுக்கு சித்திரப் போட்டியில் தன் படத்தின் மூலமாய் கிடைத்த முதற் பரிசுக்கு வியந்து ஹா' உன் கண்கள் என்னைப் பார்க்கவல்ல, சித்திரத்தை சித்திரிக்க. உன் நினைவு என் மேல் அல்ல, உன் சித்திரங்களின் மேல். ராதையைப்போல் அழுது அழுது சாக வேண்டியதுதான் என் விதி" என்று பத்திரிகையின் மேல் தன் கண்களை திருப்பினாள். உரிய பார்வையும், இனிய நகைப்பும் சேர்ந்த இளைஞன் மோஹனின் உருவம் அவளை மயக்கியது. அவன் படத்தை பிடித்துக் கொண்டு ஆனந்த மேலீட்டால் கண்களை மூடிக்கொண்டாள்.

சந்திரமோஹன் தன்னுடைய மேன்மையை நாடும் புனிதவதியிடம் நற்செய்தியை சொல்ல பரபரப்புடன் தன் முழு உற்சாகமும் வெளிப்பட "தேவி!" என்று அழைத்துக்கொண்டே உள் நுழைந்தான். அவளிடமிருந்து பதில் இல்லை. அவள் மார்பின்மேல் இருக்கும் பத்திரிகையை எடுத்து அவளைப்பார்த்தான். தேவி தேவலோகம் சென்றுவிட்டாள், என்று அறிந்ததும் "தேவி!" என்று கூவினான். சந்திரனும் "அஸ்தமித்து" விட்டான்.

## ஹாஸ்ய மஹாபுராணம்

(10-ம் பக்கத்தொடர்ச்சி)

திருந்ததால், சுகப்பிரமமும் நெருங்கிக் கதை கேட்க முடியவில்லை. தியான வேளைகளில் வியாஸர் கதையின் உட்பொருளைக் குறித்தும், அடிப்படையான தத்துவத்தைக் குறித்துமே சிந்தித்துக்கொண்டிருந்தார். ஆம்; அந்தக் கதையைப் பூர்த்தி செய்வதே அவருக்கு இப்போது தியானமும் தவமுமாயிருந்தது.

* * * *

அன்று பௌர்ணமி. சூரியாஸ்தனமாகி விட்டது. தியானம் கலைந்ததும் வியாஸர், கடலுக்குள்ளே நீண்டுசென்ற ஒரு பெரும்பாறை மீது அமர்ந்து மேற்குத் திசையை நோக்கிக்கொண்டிருந்தார். செம்படவரிஷியும் சுகப் பிரமத்தோடு அங்கே வந்து சேர்ந்தார். அதுதான் சமயம் என்று நினைத்துச் சுகப்பிரமமும், "அப்பா! பாக்கிக் கதையை இங்கே இப்போதே சொல்லிவிடவேணும்" என்று பிடிவாதம் செய்தது.

கிளி போல் கொஞ்சிய அந்தக் குழந்தை-மொழிகளைக் கேட்டுக்கொண்டே வியாஸர், மேற்குத் திசையிலே ஜரிகைக் கரையோடு தோன்றிய சில மேகங்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். சுகப்பிரமம் குதூகலமாக, "அதோ, அப்பா! கடலைக்கடைந்த தேவர்களின் ஜரிகை ஆடைகள்!" என்று சுட்டிக்காட்டியது. வியாஸருள்ளத்திலே இன்னதென்று சொல்ல முடியாத ஒரு மகிழ்ச்சி துள்ளிக்கொண்டிருந்தது. அதை எந்தத் தூண்டிலைப் போட்டு எப்படிப் பிடிக்கலாமென்று யோசித்தார் செம்படவ ரிஷி.

இப்போது சுகப்பிரமம் பளிச்சென்று கீழ் வானத்தைச் சுட்டிக் காட்டி, "அப்பா! மாமா!" என்று கூப்பிட்டுக்கொண்டே, "அதோ அமிர்த கலசம்! அதோ, அதோ!" என்றது. வியாஸர் பார்த்தார். ஆம்; அலைகளுக்கிடையே அமிர்த கலசம் எழுவதுபோல் பூர்ண சந்திரன் உதயமாகிவிட்டது. அதுதான் சமயம் என்று வியாஸரும் பாற்கடலிலிருந்து அமிர்த கலசம் பிறந்த கதையை ஜோடித்துச் சொல்லிக்கொண்டிருந்தார். அமிர்தத்தைக் கண்டவுடனே அசுரர் வாயில் நீர் ஊறியதையும், அவர்கள் "வலிமையே உரிமை!" யென்று தேவர்களைப் பயமுறுத்தியதையும், கலகம் செய்ததையும், அமிர்தத்தைப் பறித்துக்கொண்டதையும் வர்ணித்தார். பிறகு அந்த வஞ்சகர்கள் மாயா மோகினியால் வஞ்சிக்கப்பட்டதையும், அந்த மோகினி ரூபத்திலே வந்த விஷ்ணு தேவர்களுக்கே அமிர்தம் கொடுத்து மறைந்ததையும் வர்ணித்தார். அந்த அழகுத் தெய்வத்திற்குப்பரிசாகப் பாற்கடலிலிருந்து தோன்றிய அழகுத் தெய்வமான மகாலட்சுமி மணமாலை சூட்டியதையும் குறிப்பிட்டார்.

வான வீதியிலே ஒரு அழகு-ராணி ஆசை-முகம் காட்டுவது போலக் காட்சியளித்தது சந்திரன். பால்-நிலாவும் கடலும் ஒரே பாற்கடலாகக் காணப்பட்டன. "அமிர்தத்தோடு பிறந்த அந்த அழகுத் தெய்வத்தின் முகம் அதுவோ?" என்று சுகப்பிரமம் கேட்டது. வியாஸ மகரிஷிக்குக் கதை கண் முன்னே நடக்கிறது; சுகப்பிரமத்திற்கோ காட்சி கதையாகக் காண்கிறது! செம்படவ ரிஷி ஆச்சரியக் கடலில் அப்படியே முழுகிப் போனார்.

### யுத்த விவரங்கள்

"அமிர்தம் கிடைத்துவிட்டதால் தேவர்கள் அசுரர்களை ஜயித்துவிட்டார்கள்: தர்மம் அதர்மத்தை ஜயித்துவிட்டது" என்றார் வியாஸர். செம்படவ ரிஷியின் ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்ததும், "இதுதான் உலகத்தின் ஆதிமகாயுத்தம்!" என்று சொன்னார்.

அந்த யுத்த விவரங்களை மேலும் மேலும் கேட்டறிந்து கொள்ளச் சுகப்பிரமம் ஆசைப்பட்டது. அவர் அசுர சர்வாதிகாரிகள் செய்த ஆர்ப்பாட்டங்களை வர்ணித்தார். அந்த ஆர்ப்பாட்டங்கள் வாய்ப்பேச்சோடு நிற்காமல் யுத்த ஆவேசமாகி, மண்ணையும் விண்ணையும் (அதாவது பூலோகத்தையும் தேவலோகத்தையும்) ஒரு தீவிர நெருக்கடியில் கொண்டு வந்தன—என்றார். சிறு சிறு ராஜ்யங்கள் கதிகலங்கிக் குடல் நடுங்கிக் கடைசியாக மகாராஜ்யங்களோடி கரைந்துபோன வரலாறுகளை எடுத்துச் சொன்னார். அசுர விமானங்கள், நாடென்றும் நகரமென்றும், பசுவென்றும் சிசுவென்றும், ஆணென்றும் பெண்ணென்றும், கோயிலென்றும் குளமென்றும் பட்சபாதம் பாராட்டாமல் பாணங்களை நெருப்பு மழையாகப் பொழிந்து விரும்பினவர் விரும்பாதவர்களையெல்லாம் எமலோகத்திலே குடியேற்றி வைத்தன!—என்றார். அந்தத் தேவாசுர யுத்தத்தினால் எங்கே பார்த்தாலும் பயமும் வெறியும் பரபரப்பும், ஆக்கிரமிப்பும் அடக்குமுறையும், ஆபத்துகளும் மின்னல்-தாக்குதல்களும் தான்!—என்றார். "நாடுகள் சுடுகாடுகளாயின, நகரங்கள் நரககங்களாயின!—என்றார்.

சுகப்பிரமம் கண்களை மூடிக்கொண்டு, "போதும், போதும், அப்பா! இந்த வர்ணனை! இவ்வளவு பயங்கரமான யுத்தம் எந்தக்காலத்திலே நடந்தது?" என்று கேட்டது. வியாஸரும் கண்களை மூடிக்கொண்டு யோசித்து, "குழந்தாய்! இந்த மகாயுத்தம் இன்று நேற்று நடந்ததல்ல; ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பும் நடந்ததல்ல! உலக சரித்திரமும் எட்டிப்பார்க்க முடியாத அந்தப் புராண காலத்திலே நடந்த மகாயுத்தம் இது. நடந்த—நடக்கிற—நடக்கப்போகிற மகாயுத்தங்களின் ஸாரமான—அடிப்படையான—மகாயுத்தம் இது! ரிஷிகள்

ஸாரத்தைத் திரட்டிக் கொடுக்கிறார்கள்'' என்று பதில் சொன்னார்.

### கதைதானா?

"தயிரைக் கடைந்து வெண்ணெய் திரட்டுவதுபோல், பாற்கடலைக் கடைந்து அமிர்தம் எடுத்ததுபோல், நம்முடைய 'பாட்டன்,பூட்டன்'மார்களான ரிஷிகள் ஸாரத்தைக் கடைந்து எடுத்தார்களா?'' என்று சுகப்பிரமம் கேட்டது. "இல்லை: நான் தான் கண்ட, கேட்ட, அனுபவங்களின் ஸாரத்தை இப்படிக் கடைந்தெடுத்துக் கதையாக்கி விட்டேன்!'' என்றார் வியாஸர். "கதை தானா? கண்ணால் பார்த்ததுபோலிருக்கிறதே!'' என்றது சுகப்பிரமம்.

வியாஸரும் சுகப்பிரமமும் இமய மலையிலுள்ள தங்கள் தபோவனத்திற்குத் திரும்பினார்கள். கடற்கரையிலிருந்து மலையைஅடைவதற்குள், நாடும் காடுமாயிருந்த எத்தனையோ பிரதேசங்களைத் தாண்டிப் போனார்கள். வியாஸரின் உள் மனத்திலோ, மறுபடியும் தேவாசுர யுத்தம் தான். அதாவது, அந்தக் கதையிலே வரும் தர்மம், அதர்மம் என்ற பிரச்னைகள் போராடிக் கொண்டிருந்தன!

ஒரு சமயம் வெயிலாயிருந்த பிரதேசத்தில் நடந்துவிட்டு ஒருபெரிய ஆலமரத்தின் நிழலை அடைந்ததும், "அந்த வெயிலிலிருந்து இந்த நிழலுக்கு வந்ததும் எவ்வளவு சுகமாயிருக்கிறது!'' என்றது சுகப்பிரமம். உடனே வியாஸர், "ஆம்; வெயில் இருந்தால்தான் நிழல்: அப்படியே அதர்மம் இருந்தால் தான் தர்மமும் இருக்கமுடியும்! அப்படியே தேவர்களும் அசுரர்களும்!'' என்றார்.

"நிலைத்து நிற்கும் (தேவ சக்தியான)தர்மத்திற்கும், நிலையில்லாத (அசுர சக்தியான) அதர்மத்திற்கும், வெயிலுக்கும் நிழலுக்கும் இருப்பதுபோல் போராட்டம் மட்டுமல்ல; ஒரு நெருங்கிய தொடர்பும் இருக்க வேணும்!'' என்று எண்ணமிட்டார் வியாஸர். அப்போது சுகப்பிரமம் வெயிலையும் நிழலையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டே, "அப்பா! அந்த வெயிலும் இந்த நிழலும் அண்ணன்–தம்பிகள்!'' என்றது. வியாஸர் உடனே அகமகிழ்ந்து, "ஆம், ஆம்: தேவாசுரர்களும் சகோதரர்கள் தான்! ஆனால் அந்த நெருங்கிய தொடர்பை அவர்கள் உணர்ந்து கொண்டால் சண்டை ஏது?'' என்றார்.

"அப்பா! அசுரர்கள் துஷ்டர்களல்லவா?—அதர்மம் அல்லவா? தேவர்கள் நல்லவர்களல்லவா?—தர்மம் அல்லவா? அவர்களுக்கிடையே சகோதர நேசம் இருக்க முடியுமா? சேர்த்தி இருக்க முடியுமா?''

"ஆம்; வெயிலும் நிழலும் போலே, இருட்டும் வெளிச்சமும் போலே சேர்ந்துவிடலாமல்லவா? இந்தப் பிரச்னை உனக்குவேண்டாம். அண்ணன்–தம்பிகளுக்கு இடையிலும் எத்தனை பாரதப் போர்கள்! எத்தனை சகோதர வதை யுத்தங்கள்! எனினும் முடிவில் தர்மம்தான் வெற்றி பெறும். தர்மம் எதிர்த்துப் போராடி வெற்றி பெறத்தான் அதர்மம் இருக்கிறது! மறுபடியும் இதே பிரச்னை! இது வேண்டாம் உனக்கு!''

"அப்பா! நிழலுக்காகத்தான் வெயில் இருக்கிறது; வெளிச்சத்திற்காக இருட்டு!''

"ஆம், ஆம்; தர்மத்திற்காகத்தான் அதர்மம் இருக்கிறது! சமாதானத்திற்காக யுத்தம்! இந்தப் பிரச்னை, குழந்தையாகிய உனக்கு வேண்டாம். கடைசியாகத் தர்மம்—சகோதர தர்மம்தான் வெற்றி அடையப் போகிறது!''

இப்படியெல்லாம் சம்பாஷித்துக் கொண்டே வியாஸரும் சுகப்பிரமமும் தபோவனத்தை அடைந்தார்கள். ஆச்ரமத்திற்குள்ளே போகும்போது வியாசர், "ஆம், உலகத்திலே நிழலும் உண்டு, வெயிலும் உண்டு; இருளும் உண்டு, ஒளியும் உண்டு; பாவமும் உண்டு, புண்ணியமும் உண்டு; தர்மமும் உண்டு, அதர்மமும் உண்டு. ஆம், ஆம்; அமிர்தம் பிறந்த பாற்கடலிலே விஷமும் பிறந்தது: மகா லட்சுமியாகிய ஸ்ரீதேவி பிறந்த அதே பாற்கடலில் மூதேவியும் பிறந்தாள்! யுத்தம் பிறந்த உலகத்திலே சமாதானமும் பிறக்கும்; சகோதர தர்மமும் பிறக்கும்! ஹிம்ஸை தலை விரித்தாடும் உலகத்திலே அஹிம்ஸையும் தலை காட்டும்!'' என்றார்.

தயிர் கடையும் மத்தோசை கேட்டுச் சுகப்பிரமம் உள்ளே போய்விட்டது. தாழியருகே நின்று, "எப்போது வெண்ணெய் திரளும்?'' என்று கண்ணை மலர விழித்துக் கொண்டிருந்த பிள்ளையைப் பெரியவர் கண்டார். "அப்பா! இப்படித்தானே அந்தப் பாற்கடலையும் கடைந்தார்கள் அது கதையில்லை, அப்பா!'' என்றது சுகப்பிரமம்.

* * * *

"கேளாய், பேயாண்டிப் புராணிகனே!'' என்று இடையிடையே கோஷித்துப்பேயாண்டிக்குத்தூக்கம்வராமலும், திருநெல்வேலிச் சீமையின் ஞாபகம் வராமலும் செய்துகொண்டே வியாஜ மகா முனிவர், தமது தாயாதிகளான வியாஸரும் சுகப் பிரமமும் சம்பாஷித்துக் கொண்ட ஆதி மகா யுத்தம் என்ற அந்தக் கடல் கடைந்த கதையை எடுத்துச் சொன்னார். வியாஜமுனிவர் விளம்பியருளப் பேயாண்டிப் புராணிகர் கேட்டருளிய இப் புராணத்தை வாசித்தருளும்படி வாசகர்களை வேண்டுகிறேன். தூக்கம் வராமலிருக்கும்போது வாசித்துப் பாருங்கள். வாசிக்கும் போதே தூக்கம் வந்து விட்டாலும் நல்லதுதான். "அதற்கு அதுவே பலன்!' என்று வியாஜரே விளம்பி விட்டார்.

---

# குண்டலகேசி

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

லானுன். புண்பட்ட அவள் மனமும் அதனுல் சிறிதே ஆறுதலுற்றது. எவ்வாறேனும் பழைய நிலைமையில் என்னுடன் இவர் பழகினுல் போதும் என்று எண்ணி உவந்தவளாய் சத்துகனுடன் உரையாடினுள். வசந்தி மெல்ல அப்புறம் சென்று நின்ருள். ஸத்துகன் பத்திரையுடன் மாளிகையின் உட்புறம் சென்ருன். ஸத்துகனும் குதூகலித்து மகிழ்வுடன் அமர்ந்திருந்த கட்டிலுக்கு நேராக, வெளிப்புறம் நிலாமுற்றத்தில் வசந்தி படுத்து உறங்கினுள். நீண்ட நேரம் ஆகிவிட்டமையால் வசந்தி அயர்ந்து உறங்கினுள்.

## போய் உறக்கம்!

நடு இரவு. பூர்ண சந்திரன் கம்பீரமாக வெண் கிரணங்களை வீசி விளங்கினுன். எங்கும் நிசப்தம். அதுவரையில் ஸத்துகனுடன் மகிழ்ந்து பேசியிருந்த பத்திரை, அப்போதுதான் கண்ணயர்ந்தாள். ஸத்துகனும் அவளுடன் சிறிதே கண்ணுறங்கினுன். அவன் உறக்கம் பொய்யுறக்கம் என்பதை அறிய யாரால் முடியும்? காற்று மெல்ல மெல்லத் தவழ்ந்து கொண்டிருந்தது. சாளரத்தின் வழியே நோக்கினுன். நிலாமுற்றத்தில் உறங்கிய வசந்தியின் மேலாடைகள் அங்கும் இங்கும் அசைந்துகொண்டிருந்தன; அவள் கூந்தல் சிறிதே புரள்வது கூட அந்நிலவின் ஒளியிலே நன்கு புலப்பட்டது; ஒருக்கால் வசந்தி விழித்திருக்கிருளோ?" என்று ஐயம் கொண்டான். அடுத்த கணம் அவள் ஐயம் அகன்றது. சுவாஸத்தின் போக்கால் அவள் மார்பு எழுந்து விம்முவதைக் கண்டு அவள் ஆழ்ந்த உறக்கத்தில் தான் இருக்கிருள் என்பதை அறிந்து கொண்டான். பத்திரைகளைப்பு மிகுதியால் உறங்குவதையும் உணர்ந்தான். உடனே, பத்திரை அறியாமல் மெல்ல, கட்டிலிலிருந்து எழுந்தான். அவன் உள்ளம் விண் விண் என்று அடித்துக்கொண்டது. பத்திரை விழிக்காமலிருப்பதற்காக, பூனைபோல் மெல்ல, கட்டிலிலிருந்து கீழிறங்கினுன். இறங்கியவன் பத்திரையை ஒருமுறை நோக்கிவிட்டு இரண்டடிகள் வேறு புறமாக எடுத்து வைத்தான். அவ்வளவில் காலடி சப்தம் கேட்டு பத்திரை விழித்துக்கொண்டாள். எனினும், சிறிதும் அசைவில்லை. ஸத்துகன் எங்கே போகிருன்? என்பதை அறிய எண்ணிப் படுத்தவாறே இருந்தாள்.

## பத்திரை பதறினுள்

ஸத்துகன் சட்டென்று கதவைத்திறந்து நிலா முற்றத்திற்குள் புகுந்தான். அதைக் கண்டதும் பத்திரை திடுக்குற்ருள். சாளரத்தின் உட்புறமாய்க் கட்டிலில் இருந்த வண்ணம் தலையைத் தூக்கிப்பார்த்தாள். ஸத்துகன் அடிமேல் அடி வைத்து வசந்தியின் அருகே சென்ருன். மேல் உத்தரீயம்கூட அவன்மீது இல்லை. அந்தக் காட்சியைக் காணக் காண பத்திரைக்கு உள்ளம் வெடித்துவிடும்போல் இருந்தது. மெய்ம்மயிர் சிலிர்க்க மீண்டும் நோக்கினுள். வசந்தியின் மேனியில், அவள் மேலாடைகள் காற்ருல் அங்குமிங்கும் திளைப்பதைக் கண்ட பத்திரை வசந்தி விழித்திருக்கிருள் என்றே எண்ணிவிட்டாள். வசந்திமீது சந்தேகம் உண்டாயிற்று அவளுக்கு. மனம் பதறியது. ஸத்துகன் வசந்தியின் அருகில் சென்றதும், அவள் மார்புக்கு அருகில் மண்டியிட்டு அமர்ந்தான்; அவ்வளவில் பத்திரைக்கு நிலை கொள்ளவில்லை. மூச்சுத்திணறியது அவளுக்கு. வாய்திறந்து கூக்குரலிடலாமா என்றுகூட எண்ணிவிட்டாள். 'வசந்தி' நீ இவ்வளவு வஞ்சகி என்று நான் அறியாதுபோனேன். இவர்மீது காதல்வெறி கொண்டு உலவுகிருய் என்பதை இதுவரையில் நான் அறியேன்! ஆ! இவரும், உன்மீது காதல் வெறிகொண்டுள்ளாரே! ஆண்மைக்கு இது அழகா? என்னுடன் வாழ்க்கை நடத்த விரதம் பூண்ட இவர் இதுபோன்ற செயலில் தலையிடுவது நியாயமா? சயந்தி ஒருத்திதான் என்று எண்ணினேன்; வசந்தியும் இவருக்குக் காமக் கிழத்தி என்பது இப்போது தெரிந்தது! வசந்தி! நீ பெரிய மாயக்காரி! வஞ்சகி! என்னை வஞ்சித்துவிட்டாய்! இந்தக் காட்சியை என் கண் கொண்டு காண்பேனே?—" என்று தனக்குள் வெதும்பிக் கூறிக்கொண்டாள். கண்கள் மட்டும் நிலா முற்றத்தில் நடக்கும் காட்சியைக் கண்டனவேயன்றி அவள் உடல் உணர்ச்சியற்றுச் சோர்ந்தது.

## வசந்தியின் ஆவி பிரிந்தது

அப்போது சட்டென்று வசந்தியின் மார்புக்கு நேராக மின்னல் ஒளி விட்டு வீசியது. பத்திரையின் கண்களை மினுக்கென்று நழுவச் செய்தது அவ்வொளி! ஸத்துகன் வசந்தியைத் தழுவுவது போன்று அவள் கண்களுக்குத் தெரிந்தது. ஸத்துகனின் ஒரு கை வசந்தியின் நெற்றியிலும் மற்ருெரு கை அவள் மார்பிலும் இருந்தன. பத்திரை நிலை கொள்ளாமல் கட்டிலை விட்டு எழுந்தாள். அப்போது ஒரு கூக்குரல்கேட்டது. ஆ!... பத்திரை! இறந்தேன்" என்று வசந்தி விறிட்டுக் கூவினுள். பத்திரை ஓடோடியும் வந்தாள். அதற்குள்ளாக, ஸத்துகனின் கை வாள், வசந்தியின் மார்பில் பிடிவரையில் அழுந்திவிட்டது. வசந்தியின் கண்கள் ஸத்துகனை நன்ருக மலரநோக்கின.' அவள் உயிர் துடிப்புடனிருந்தது; "வசந்தி, இளந்தத்தன் மாளிகையில் இந்த வாள்கொண்டு சபதம் செய்ததை இன்று பூர்த்தி

செய்தேன். விதியை விரைவில் அழைத்துகொண்டாய்!'' என்று அமைதியுடன் கூறினான் ஸத்துகன். வசந்தி அவற்றைக்கேட்டாள். அவள் கண்கள் இருண்டன. மார்பிலிருந்து, குருதி பீறிட்டெழுந்தது. அந்தக் காட்சியைக் கண்டு பத்திரை வசந்தியின் முகத்தைத் தழுவிக்கொண்டாள். "என்னை, அவர்...பாலகர் சமாதி..." என்ற வார்த்தைகளே வசந்தியின் வாயிலிருந்து வெளிவந்தன, அதற்குள், அவள் உயிர் உடலை விட்டு அகன்றது. கவின் கொண்ட அவள் வெற்றுடலமே கீழே கிடந்தது.

### என் இந்தக் கொலை வெறி?

பத்திரை மதிமயங்கி ஸத்துகனை நோக்கினாள். வசந்தியின் மார்பிலிருந்து அப்போதுதான் வாளை உருவி உறையில் செருகினான் ஸத்துகன். வியர்த்துப் பிரமை கொண்டு தோன்றும் பத்திரையின் முகத்தை நோக்கி, "பத்திரை, வருந்தாதே; நம் சுக வாழ்வுக்கு நாசத்தைத் தேடியவள் இவள்! அதனால் இன்று இவளை நாசம் செய்ய நேர்ந்தது. இவளாலேயே நம்வாழ்க்கை சில நாட்களாக மாறி வரலாயிற்று, விபரமாகச் சொல்கிறேன். எழுந்திரு! இவளை இவள் விருப்பப்படி பாலகன் சமாதிக்கு அருகில் புதைத்து விடுவோம்...எழுந்திரு..." என்று கூறிவிட்டு, வசந்தியின் உடலை எடுத்துக் கொண்டு சென்றான். வாய் பேசாமல் ஸத்துகனுடன் சென்றாள் பத்திரை. பாலகன் சமாதிக்கு அருகில் வசந்தியைப் புதைத்தான்; 'இனி எனக்குப் பகையே இல்லை!' என்று அவன் மனம் ஏமாப்புற்றது. வசந்தியின் பிரிவால் கண்ணீர் பெருக்கியவாறே நின்றாள் பத்திரை. அந்நிலையில் அவள் என்ன செய்வாள்? ஸத்துகன் பத்திரையைத் தழுவிக் கொண்டு "உள்ளே வா, யாவற்றையும் சொல்கிறேன். கலங்காதே!" என்று அழைத்துச் சென்றான். 'இந்தக் கொலை வெறிக்குக் காரணம் என்ன?' என்று அவள் மனம் ஆராய்ந்து கலங்கியது. ஸத்துகனுடன் உள்ளே போனாள்.

(தொடரும்.)

## சா ந் தி னி

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

ளுடைய பேச்சுக்களினின்று அறிந்த விஷயம்.

"ராம் பிரகாஷைப்பற்றி அவள் புகழ்வது சொல்லத்தரமன்று. அவனிடத்தில் அவள் கொண்டுள்ள வாஞ்சையின் அளவு கொஞ்ச நஞ்சமல்ல. அதே போல் ராம் பிரகாஷிற்கும் சாந்தினியைப் பற்றிப் பேசுவதென்ருல் சலிப்பே இல்லை. அதில் அவனுக்குத் தனியான உத்ஸாகம் ஏற்படும். அப்படியிருந்தும் இந்த சமயம் அவளை விட்டு ஓடி வந்ததற்குக் காரணம் இந்திரா தேவிதான் என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். பிரிக்க முடியாத ஒரு சகோதரியிடமிருந்து சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வரும்படியான மனநிலை அவனுக்கு ஏற்பட்ட காரணம் இந்திரா தேவிதான். அவளிடமிருந்து நீங்கள் அவனைப் பிரிப்பது சிரமமான காரியம் தான். அதற்கு இன்று இரவு போனாலும் ஒன்றுதான் நாளை போனாலும் ஒன்ருகத் தான் முடியப் போகிறது. அதற்குத்தான் நாளை போகலாமென்றேன். அதுவும் தவிர இப்பொழுது மணி எட்டடித்து விட்டது! அங்கு போனாலும் அவனைப் பார்ப்பது சந்தேகம் தான். என்ன சொல்கிறீர்கள்?" என்ருன்.

அவன் கூறியதும் நியாயமாகவே எனக்கு பட்டது. அவனுடன் அவன் வீட்டிற்குப் போனேன். அன்றிரவு, கொஞ்சம் உபயோகமான சமாச்சாரத்தைத் தெரிந்து கொண்டோம் என்ற திருப்தியுடனும் பலவிதமான எண்ணங்களுடனும் சஞ்சலமான மனத்துடன் உறங்கி விட்டேன்.

## தோல்வி

"ராத்திரி எங்கே போயிருந்தாய்?" என்றேன் சுரேஷை.

"இந்திரா தேவியின் விஷயமாக அறிந்து கொள்வதற்குத் தான்" என்ருன் அவன்.

"நீ தான் அவளைப் பற்றித் தெரியும் என்று முதலில் சொன்னுயே. இன்னும் என்ன அவளைப் பற்றி அறியச் சென்ருய்?"

"ஆமாம் தெரியுமென்று சொன்னேன். அதில் சில சந்தேகங்கள் இருந்தன. அதை நிவர்த்தி செய்து கொள்ளத்தான் சென்றிருந்தேன்."

"என்ன தெரிந்து கொண்டாய்? என்னிடம் சொல்லக் கூடாத விஷயமா?"

"எல்லாம் தான் தெரிந்து கொண்டேன். உங்களிடம் சொல்லக்கூடாத விஷயமும் அல்ல. ஆனல் இப்பொழுது சொல்லும் உத்தேசமில்லை. ராம் பிரகாஷைப் பார்த்துவிட்டு வாருங்கள் சொல்கிறேன்."

"ராம் பிரகாஷைப் பார்த்து விட்டுப் போகும் எண்ணமில்லை எனக்கு. அவனையும் அழைத்துக் கொண்டுப் போவதாகத்தான் உத்தேசம்."

"உங்கள் உத்தேசம் உத்தேசத்துடனேயே தான் இருக்கும். காரியத்தில் பலிப்பது துர்லபம்"

"பார்க்கலாம். சரி வருகிருயா போகலாம்"

"ஆட்சேபணையில்லை. ஆனல் நான் அந்த வீட்டு வாசற்படி வரையில் தான் வருவேன். பிறகு நீங்கள் தான் உள்ளே போக வேண்டும். நான் வெளியில் காத்துக்கொண்டிருக்கிறேன்."

"சரி!" என்று கூறி இருவரும் புறப்பட்டோம்.

காலை எட்டு மணியிருக்கும், இளம் சூரியனின் வெயில் வெகு அழகாக இருந்தது. கடைகள் ஒன்று ஒன்ருக அப்பொழுது தான் திறக்கப்பட்டுக்கொண்டிருந்தன. தெருவில் அதிக நடமாட்டம் கிடையாது. ஆலைகளில் வேலை செய்பவரும், காய்கறி விற்பவர்களுடைய கூட்டமும் தான் இருந்தது.

இரண்டு மைல் நடந்தவுடன் பெரிய மார்க்கெட் வந்தது. அதற்கடுத்தாற்போல் வலது புறத்தில் போன தெரு வழியாக நாங்கள் நடந்தோம். சிறிது தூரம் போனவுடன், 'அதோ நீல வர்ணம் பூசப்பட்டிருக்கும் பங்களாதான் இந்திரா தேவியினுடையது. நீங்கள் போங்கள் நான் இங்கேயே இருக்கிறேன்" என்ருன் சுரேஷ் ஒரு பங்களாவைச் சுட்டி காட்டி.

நான் பங்களா வாசலை அடைந்தேன்.

'இந்திரமால்' என்ற எழுத்துக்கள் பித்தளைத் தகட்டில் எழுதப்பட்டு வாசல் சுவரில் பதிப்பிக்கப்பட்டிருந்தது. இரும்புக் கம்பிகள் போட்ட ஒரு பெரிய கதவு வாசலில் இருந்தது. முன் பக்கம் அநேக குரோட்டன்ஸ் செடிகளும், புஷ்பச் செடிகளும் இருந்தன.

அந்த பங்களாவைப் பார்த்ததும் அதில் வசிப்பவர்கள் பணக்காரர்களாய்த்தான் இருக்க வேண்டுமென்பது யாருக்கும் எளிதில் புலனுகும்.

வாசல் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றேன். அப்பொழுது ஒரு வேலைக்காரி கடுகடுத்த முகத்துடன் வந்தாள். "யார் நீங்கள்?" என்று அதிகாரமான த்வனியுடன் கேட்டாள்.

"நான் யாரென்று உனக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. உன் எஜமானி இருக்கிருளா? அவளையும் இரண்டு நாட்களுக்கு முன்பு இங்கு வந்த ஒருவரையும் நான் பார்க்க வேண்டும்" என்று சற்று கடினமான குரலிலேயே பதிலளித்தேன்.

"இவ்வளவு அதிகாலையில் அவர்களை எப்படிப் பார்க்க முடியும்?" என்ருள் அவள்.

"மணி என்ன தெரியுமா? அப்படியே தெரியாவிட்டாலும் சூரியனைப் பார்த்தாவது தெரியவில்லையா இப்பொழுது மணி என்ன இருக்குமென்று? இதை அதிகாலை என்று சொல்வது வேடிக்கையாகத்தான் இருக்கிறது!" என்றேன்.

வேலைக்காரியின் முகம் சுண்டிவிட்டது. நான் அவளுடன் அவ்விதம் பேசியிருக்கக்கூடாது. இருந்தாலும் அவள் முதலில் என்னை யார் என்று கேட்ட அகம்பாவமான தோரணை அப்படிப் பேசும்படி செய்து விட்டது என்னை.

"சரி கொஞ்சம் இருங்கள். எஜமானியிடம் சொல்கிறேன். யார் வந்திருப்பதாகச் சொல்கிறது!" என்ருள்.

"நீ எஜமானியிடம் ஒன்றும் கூறவேண்டாம். யாரோ ஒருவர் வந்திருக்கிருரே அவரிடம் யாரோ உங்களைத் தேடிக்

கொண்டு வந்திருக்கிருர் என்று சொல் போதும்."

அவள் உள்ளே போனுள். சற்று நேரத்தில் ராம்பிரகாஷ் கலங்கிய கண்களுடன் அங்கு வந்து சேர்ந்தான். என்னைப் பார்த்தவுடன் அவன் திடுக்கிட்டு விட்டான் என்பதை அவன் மருண்ட பார்வையினின்று தெரிந்து கொண்டேன்.

"நிர்மல் பாபுவா......?" என்ருன்.

"ஏன்? இரண்டு மூன்று நாட்களில் நிர்மல் பாபுவைக்கூட மறந்து விடும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டதோ?" என்றேன்.

"இல்லை. நான் இங்கிருப்பது உங்களுக்கு எப்படித் தெரியும் என்று தான் ஆச்சர்யப்படுகிறேன்" என்ருன்.

"உலகத்தில் எவ்வளவோ அற்புதமான விஷயங்கள் நடக்கின்றன. இதில் ஒருவர் இருக்கிற இடத்தைக் கண்டு பிடிப்பது தானு சிரமமான காரியம்?" என்றேன் நான்.

"என்னைக் கண்டு பிடிக்கும்படியான அவசியம் தங்களுக்கு ஏற்படுவானேன்!"

அவன் குரலில் ஒருவித அலட்சியம் இருந்தது. முகத்தில் கூடக் கொஞ்சம் கடுமை தென்பட்டது.

"ஜீவன் பிரகாஷ் என்று ஒரு சகோதரனும், சாந்தினி என்ற ஒரு சகோதரியும் உனக்கு இல்லாதிருந்தால் உன்னைக் கண்டு பிடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காதுதான்."

சிறிது நேரம் அவன் பேசாமல் இருந்தான். நான் ஆரம்பித்தேன்:

"ராம்! இது எல்லாம் என்ன விளையாட்டு? இவ்வளவு நாளாகச் சரியாக இருந்த உன் மனம் திடீரென்று இப்படி மாறுவானேன்? எதற்காக வீட்டைவிட்டுச் சொல்லாமல் ஓடி வரவேண்டும்? உன் மீது அளவிலா அன்பு கொண்ட உன் சகோதரனும், சகோதரியும் உன் பிரிவால் அநுபவிக்கும் துயரத்தை நீ அறிவாயா? உன் இஷ்டங்களைத் தெரிவித்தாயானுல் அவர்கள் அதற்கு மாருக நடந்து விடுவார்களா? ராம், பேசாமல் திரும்பி வா. குடும்பத்தில் ஏற்பட்டிருக்கும் துயரத்தை நீக்கு" என்றேன்.

"நிர்மல் பாபு எப்படியும் ஒரு நாள் எல்லோரும் பிரிய வேண்டியதுதானே! இதில் என்ன வருத்தமடைவதற்கு இருக்கிறது? என் இஷ்டம் பூர்த்தியாகுமானுல் நான் ஏன் வீட்டைவிட்டு வர வேண்டும்? நான் சொல்வதை ஒருவரும் கேட்கமாட்டார்கள் என்பது எனக்கு நிச்சயம் தெரியும். என் எண்ணங்களைக் கூறி அவர்களை என் பேரில் வெறுப்படையச் செய்வதைக் காட்டிலும் அதைச் சொல்லாமலே வெளியேறி விடுவது நலம் என்று கருதித்தான் ஓடி வந்தேன். நான் ஓடி வந்த இடத்தையும் நீங்கள் கண்டு பிடித்து விட்டீர்கள்."

"ராம்; உன் விருப்பத்தைச் சாந்தினி கூடவா புறக்கணித்து விடுவாள்?';

"சாந்தினியால் என்ன முடியும் நிர்மல் பாபு? அவள் ஒரு பெண். என் தாயாருக்கு அடங்கி நடப்பவள் இன்று. நாளை புருஷனுக்கு அடங்கி நடக்கப்போகிருள் அவள் என் மீது கொண்டிருக்கும் அளவிலா அன்பின் காரணமாக என் செய்கைகளில் இஷ்டமிருக்கலாம். ஆனுல் என் அண்ணுவிற்கும், தாயாருக்கும் இஷ்டமில்லாத விஷயத்தில் அவள் பிரவேசிக்கவே முடியாது."

"உன் விருப்பந்தான் என்ன? என்னிடம் கூறேன்!"

"இந்த வீட்டிற்கு அதிகாரியான இந்திராதேவி என் மனைவியாக வேண்டுமென்பதுதான் என் விருப்பம். இந்திரா முதலில் நம் குலத்தைச் சேர்ந்தவளல்ல என்பது என் அண்ணுவின் முதல் மறுப்புக்காரணமாகலாம். மற்ருென்றைக் கூறினுல் நீங்களே கோபம் அடைவீர்கள். அதாவது அவள் தாஸி. ஆனுல் பணத்திற்காக தொழில் நடத்துபவளல்ல."

இதைக் கூறியவுடனேயே எனக்குக் கோபம் வந்துவிட்டது. சுரேஷ் இந்திராதேவியைப் பற்றிக் கூறப்போவது இதுவாகத்தான் இருக்கும் என்று நினைத்துக்கொண்டேன். ஜீவன் பிரகாஷின் குடும்பப்பெருமையென்ன! இப்பொழுது இவன் கொண்டிருக்கும் கேவலமான ஆசை என்ன! இபபடியும் மனிதனுக்கு மூளைபோகுமா? நல்ல குடும்பத்தில் உதித்த மணிகளுள் ஒரு சோடையா? நல்லவேளை இவன் இதை ஜீவன்பாபுவிடம் தெரிவிக்காமல் இருந்ததே மேல் என்று எனக்குப்பட்டது. 'அந்த மட்டில் குலப்பெருமையைக் காப்பாற்றினுன்' என்று சந்தோஷமடைந்தேன்.

"நிர்மல்பாபு, பார்த்தீர்களா உங்கள் முகமே இதைக்கேட்டவுடன் இவ்வளவு மாறுதலையடையும் பொழுது என் சகோதரன் எவ்வளவு வெறுப்புறமாட்டான்!" என்ருன்.

"அப்படி உன் கூடப்பிறந்தவர்களுடைய மனம் நோகும்படியான காரியத்தை ஏன் செய்ய வேண்டும்?" என்றேன்.

"அது தான் பாபு உலக விசித்திரம்! நீங்கள் எவ்வளவோ கதைகள் எழுதுகிறீர்களே அதில் இந்தக் 'காதல்' என்ற வார்த்தை எவ்வளவு தடவை அடி படுகிறது? அந்தக் காதலுக்காக எவ்வளவு தியாக ஆத்மாக்களைச் சிருஷ்டிக்கிறீர்கள்? அதே 'காதல்' என்ற வார்த்தைதான் என் மனப் பிராந்தியத்தில் இந்திரா தேவியைத் தொடர்ந்து சென்று கொண்டிருக்கிறது."

"புனிதமான உள்ளத்தில் ஏற்பட்ட பரஸ்பரக் காதலுக்கும் பார்ப்பவரை நேசிக்குப் தாஸியிடம் காதல் கொள்வதற்கும் வித்தியாசமில்லையா ராம்?"

"இருக்கலாம் பாபு! ஆனுல் அவள் பேரில் தானே எனக்குக் காதல் ஏற்பட்டிருக்கிறது."

"அதற்காக உன் குடும்பத்திற்கே அபகீர்த்தியை உண்டு பண்ண விரும்புகிருயா? உன் தங்கை சாந்தினிக்குக் கல்யாணம் ஆக வேண்டாமா? வேண்டாம் ராம், அவளை உதறித் தள்ளி விட்டு வந்து விடு."

"ஹூம்! நிர்மல் பாபு, இது நடக்காத விஷயம். என் குடும்பத்திற்கு அபகீர்த்தி உண்டு பண்ணும் எண்ணமும் எனக்குக் கிடையாது.

அப்படியிருந்தால் என் எண்ணத்தை எல்லோருக்கும் தெரிந்திருக்கும்படி செய்திருப்பேன். என் தங்கை சாந்தினிக்கு நிகரற்ற கணவன் வரவேண்டுமென்பதுதான் எனது அந்தரங்கத்தில் சூழ்ந்து கொண்டிருக்கும் அளவிலா ஆசை.

'நீங்கள் என் நண்பர் ஆகையால் நான் இங்கிருப்பதைக் கூற வேண்டாம். ஏதாவது தகுந்த சமாதானம் கூறி என் குடும்பத்தின் துயரை ஆற்றுங்கள்.''

''உன் ஹிருதயம் எவ்வளவோ மிருதுவானதென்று எண்ணினேன்; இவ்வளவு கடினமானதாக இருக்குமென்று எதிர்பார்க்கவில்லை. நீ சொன்னாலும் சொல்லாவிட்டாலும் நீ இங்கிருப்பதை நான் ஒருவரிடமும் சொல்லப் போவதில்லை. எப்படியும் விஷயம் தெரியாமலும் போகப் போவதில்லை. அவரவர் விதிப்படி நடக்கட்டும், நான் சென்று வருகிறேன்'' என்று கூறிக் கிளம்பினேன்.

''நிர்மல் பாபு, ஏதாவது ஆகாரம் சாப்பிட்டு விட்டுப் போங்களேன்!'' என்றான்.

''தாஸி வீட்டிலா! ஒருபொழுதுமில்லை உன்னைப் போல் ஆசாரம் கெட்டவனல்ல'' என்று கூறிவிட்டு புறப்பட்டேன். ராம்பிரகாஷின் முகத்தில் ஒருவிதமான அவமான உணர்ச்சி தென்பட்டது.

(தொடரும்.)

சிறுவர் பகுதி

# பால்கன்-ஜீ-பாரீ

★

[அகில பாரத பாலர் சங்கத்தின் ஆதரவில் நடத்தப்படுவது]

அன்பார்ந்த சகோதர சகோதரிகளே !

சகோதர நடேசன் (ஸிலோன்) வாழ்க்கை நிகழ்ச்சி ஒன்றைப்பற்றி எழுதுகிறான்:—

"எனது பன்னிரண்டாவது வயதில், அதாவது மூன்று வருடங்களுக்கு முன் நடந்த சம்பவத்தைத்தான் குறிப்பிடுகிறேன். இலங்கையிலுள்ள புண்ணிய ஸ்தலமாகிய கதிர்காமத்தை என் ஆயுளில் ஒரு தரமாவது பார்க்க வேண்டுமென்ற ஆவல் வெகு நாட்களாக என் மனதில் இடம் பெற்றிருந்தது. எங்கப்பாவும் அம்மாவும் கதிர்காமத்திற்குப் போனார்கள். ஆனால் என்னை அழைத்துப் போகவில்லை. நானும் மாமாவும் வீட்டிலிருக்க நேர்ந்தது. போனவர்கள் கதிர்காம யாத்திரையை முடித்துக்கொண்டு மூன்று நாளில் திரும்பி வந்துவிட்டார்கள். அவர்கள் கதிர்காமத்தில் கண்ட அதிசயங்களைப்பற்றிக் கூறும்போது எனது ஆவல் இன்னும் பன்மடங்கு அதிகமாகியது. ஆசை மேலீட்டினால் அப்பாவின் கோட்டுப் பையிலிருந்து 4 ரூபாய் எடுத்துக் கொண்டு, ஒருவருக்கும் தெரியாமல் வெளியேறினேன். நான் "பலாங் கொடை"யில் வந்திறங்கினேன். ஆனால் என் கையில் ஒரு சதமாவது இல்லை. பஸ்ஸிற்கு 3 ரூபாய் கொடுத்தாகிவிட்டது. மீதி ஒரு ரூபாய் எங்கேயோ தொலைந்து போய்விட்டது. இப்பொழுது நான் கதிர்காமத்திற்கும், வீட்டிற்கும் வெகு தூரத்தில் இருந்தேன். பாலம் கொடை வாசிகளைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. பசி காதை அடைத்தது. மெதுவாக ஒரு வீட்டுத் திண்ணையில்போய் உட்கார்ந்து கொண்டேன். நான் செய்த மடத்தனத்தை நினைந்து அழுதுகொண்டிருந்தேன். அப்போது அவ்வீட்டின் உள்ளே இருந்து ஒரு சிறுவன் வந்தான். அவன் ஒரு முஸ்லிம். அவன் வந்ததோடு நில்லாமல், எனக்கு நடந்திருக்கும் அல்லல் களைப்பற்றி அறிந்து கொண்டான். என்னை வீட்டினுள் அழைத்துச் சென்று பலகாரங்கள் கொடுத்தான். மேலும் அவன் அப்பாவிடமிருந்து மூன்று ரூபாய் வாங்கிக் கொடுத்து, புத்திமதி கூறி, வீட்டிற்குத் திருப்பி அனுப்பி விட்டான். நான் வீட்டிற்கு வந்தேன். என்னைக் கண்டதும் அப்பா தடியை எடுத்தார். ஆனால் அம்மா என்னைத் தடியடியிலிருந்து காப்பாற்றி வீட்டினுள் அழைத்துச் சென்றாள். கிடைத்தது.

இந்த சம்பவத்திற்குப் பிறகு போன மாதம் தான் கதிர்காமத்திற்குப் போய் வந்தேன். போகும் வழியில் என்னைக் காப்பாற்றிய முஸ்லிம் நண்பன் பலீலின் வீட்டிற்குச் சென்றேன். அந்நேரம் படம் எடுப்பதற்குத் தயார் செய்து கொண்டிருந்தான் என் நண்பன். எனக்கும் படத்தில் தோன்றஇடம்.

நிற்க இப்போதும் என் நண்பன் நான் முதலில் தாய் தந்தையருக்குத் தெரியாது வந்து தவித்த விதத்தைக் கூறி நகைக்கிறான். ஆதலால் சகோதரர்களே! சகோதரிகளே! தாய் தந்தையருக்குத் தெரியாது ஒரு காரியத்திலும் புனைந்துவிடாதீர்கள். அவர்களுக்குத் தெரியாது முனைந்தால், காரியங்கள் யாவும் கை கூடாது, கஷ்டப்பட நேரிடும் என்பது திண்ணம்."

சகோதரன் சொல்வது சரி தானே?

"அப்பா அம்மாவுக்குக் கூடத்தெரியாமல் போகத் தூண்டும்படி, அவ்வளவு விசேஷமான ஊரா கதிர்காமம்?" என்று நீங்கள் கேட்கிறீர்கள் அல்லவா? அந்தக் கேள்விக்குப் பதில் சகோதரன் நடேசனே சொல்வான் என்று நினைக்கிறேன்.

சகோதரன் ஹரி.

# மதிப்புரை

★

## புனர்ஜென்மம்

[ஸ்ரீ கு. ப. ராஜகோபாலன் எழுதியது. மயிலை, கலைமகள் காரியாலயத்தாரால் பிரசுரிக்கப்பட்டது. 235 பக்கங்கள். விலை ரூ. 2.]

ஸ்ரீ கு. ப. ரா. வைத் தமிழ் நாட்டு வாசகர்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டிய அவசியமில்லை. வாழ்க்கையிலே நிகழக் கூடிய சம்பவங்களை அழகான சொற்களைக் கொண்டு கதைகளாகப் புனைந்ததொகுப்புதான் 'புனர்ஜென்மம்' என்ற மகுடத்தில் வந்திருக்கும் புத்தகம். ஹாஸ்யம், சிருங்காரம், சோகம் ஆகிய ஒவ்வொரு ரஸத்தையும் தமது ஒவ்வொரு கதைகளிலும் சந்தர்ப்பத்திற்கேற்றவாறு ஆசிரியர் புகுத்தியிருக்கிறார். இப்புத்தகத்தில் 26 கதைகள் அடங்கியிருக்கின்றன. இவற்றைச்சேர்த்து வெளியிட்ட கலைமகள் காரியாலயத்தார் சிறந்த முறையில்புத்தகத்தைஅச்சிட்டு பிரசுரம் செய்திருக்கின்றனர்.

## சின்னதேவி

[ஸ்ரீ தி. நா. சுப்பிரமண்யம் எழுதியது. மயிலாப்பூர் கலைமகள் காரியாலயத்தார் பிரசுரித்து வெளியிட்டது. விலை அணா 12.]

ஸ்ரீமான் சுப்பிரமண்யம் 'மித்திரன்' வாரப்பதிப்பில் தொடர்ச்சியாகக் கட்டுரைகள் பல வரைந்திருக்கிறார். இப்புத்தகத்தை எழுதியவரும் அவரேதான். நாடகரூபத்தில் வெளியிடப்பட்டுள்ள இப் புத்தகம் ரேடியோவில் ஒலிபரப்பப்பட்டவை. நமது 'வாரப்பதிப்பிலும்' இவை பிரசுரமாயிருக்கின்றன. எனவே அவற்றின் ரஸம் பற்றி இங்கு விளக்கத் தேவையில்லை. ஆங்காங்கு சிற்சில மாறுதல்களுடன் தோன்றும் இந்நாடகம் மிக ருசிகரமானதாயிருக்கிறது. —"நீலம்"

## போர்போகும் போக்கு

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

காரணமானவர்களைத் தங்களிடம் ஒப்புவிக்கவேண்டும் என்பதை வற்புறுத்தத் தாம் கங்கணம்கட்டிக்கொண்டிருப்பதாகக் கூறியதாகவும், இவ்வறிக்கைகளுக்கு பிறகு கால சக்கரம் நியாயத்திற்கு அனுகுணமான படிச் சுழன்று வருவதாயும் முஸோலினியும் அவரது சகாக்களும் ஒரு நடு நிலைமை நாட்டில் அடைக்கலம் புகுவார்கள் என்ற வதந்தி கிளம்பியிருப்பதாகவும், இதே மாதிரி ஒரு நாள் ஹிட்லரும் டோஜோவும் தமது சகாக்களுடன் தங்களது நாடுகளை விட்டு ஓட முயற்சிப்பர் என்றும், அவர்களுக்குத் தஞ்சம் தர எந்த நடுநிலைமை நாட்டிற்கும் சந்தர்ப்பம் இல்லாமல் போகும் எனத் தாம் கருதுவதாகவும், இத்தகைய குற்றவாளிகளுக்கு எந்த நடு நிலைமை நாடு அபயம் அளித்தாலும், அதை அமெரிக்க ஸர்க்கார் விரோதமாகக் கருதுவர் என்றும், இதற்கும் அவை சம்மதியா எனத் தாம் நம்புவதாகவும் ஜனாதிபதி தெரிவித்தார்.

* * * *

### ரஷ்ய யுத்தம்

ஓரெல் பிரதேசத்தில் ரஷ்ய துருப்புகள் எதிரிகளின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமலும், எதிர்த்தாக்குதல்களை சமாளித்துக்கொண்டும் முன்னேறித் தாக்கிப் பல புதிய இடங்களைக் கைப்பற்றின.

பைல்கோராட் பகுதியில் ரோந்து நடவடிக்கைதான் அதிகம். டான்பாஸ் பிரதேசத்தில் வரோஷிலாவ் கிராடுக்குத் தென் மேற்கே, ரஷ்யப் படையினர் எதிர்த் தாக்குதல்களைத் தடுத்தனர். எதிரிக்கு அதிக நஷ்டம்.

லெனின் கிராட் போர் முனையில் மிகாவுக்கு அருகே ரோந்து நடவடிக்கைதான்.

ஓரெலுக்குத் தெற்கே ஒரு ரஷ்யப் படை பல ஊர்களைப் பிடித்துக் கொண்டதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. எதிர்த் தாக்குதல்கள் பலன்தரவில்லை.

ரஷ்யப் படையின் முற்போக்கைத் தடுப்பதற்காக ஹிட்லர் தமது படைகளைக் கொக்கி போல் குவித்து தாக்குவதாகவும், இதுவரை இத்தகைய முயற்சியால் நஷ்டம் மட்டுமின்றி பலனும் ஏற்படாது போயிருப்பதாகவும் "ரெட்ஸ்டார்" பத்திரிகை தெரிவித்தது.

வரோஷிலாவ்கிராடுக்குத் தென்மேற்கே டானெட்ஸ் போர்முனையில் பெரிய ஜெர்மன் தாக்குதல்கள் நடப்பதாகவும் அதே பத்திரிகை எழுதுகிறது.

மழையினாலும் ஜெனரல் ரகோவ்ஸ்கியின் படைகளது வேகம் தளரவே இல்லை; ஓரெலில் முன்போல் தாக்குதல் உக்கிரமாக இருக்கிறது. 200 மைல் நீளத்திற்கு வளைந்து போகும் போர்முனையில் சுமார் 5 லக்ஷம் வீரர்கள் ஈடுபட்டிருக்கின்றனர். சென்ற மாதம் ஜெர்மனியர் சுமார் லக்ஷம்பேரைப் பலி கொடுத்தனர்.

ஓரெல்-ப்ரியான்ஸ்க் ரயில்வே பாதை அடிக்கடி தாக்கப்பட்டு வருவதாயும் ஓரெலிலிருக்கும் எதிரிப் படையும் குண்டு வீச்சு காரணமாகக் குலைந்து வருவதாயும் கூறப்படுகிறது.

* * * * *

### ஸ்ரீ ஸவர்க்கார் ராஜிநாமா

6-வருஷ காலம் தீவிரமாக ஹிந்துமகாசபைத்தலைவராயிருந்து சேவை செய்த பிறகு ஸ்ரீ வீர ஸவர்க்கார் தமது தலைமைப் பதவியிலிருந்து விலகினார். தேக அசௌகரியந்தான் அவர் ராஜிநாமாவுக்குக் காரணம். இதற்கு முன்னரே அவர் தேக சுகத்துடனில்லை.

---



கண்டரமாணிக்கம் ஸ்ரீ ராமஸ்வாமி அய்யங்கார் பெண் சௌ. ஜெயலக்ஷ்மிக்கும், சோழங்க நல்லூர் ஸ்ரீ எஸ். கிருஷ்ண்சாமி அய்யங்கார் குமாரன் ஸ்ரீ. சேஷாத்ரிக்கும் சமீபத்தில் கும்பகோணத்தில் விவாகம் நடைபெற்றது.





லிவர்பூலில் இந்திய மாலுமிகளுக்காக ஏற்படுத்தப்பட்ட ஹாஸ்டலின் தோற்றம். பர்க்கன்ஹெட்டில் இது இருக்கிறது. பிரிட்டனில் இது மிகவும் சிறந்த ஹாஸ்டல் எனப்படுகிறது.





லண்டனில் ராயல் விமானப்படை வாரம் விசேஷ உற்சாகத்துடன் கொண்டாடப்பட்டது. ஜனங்கள் விமான உற்பத்தியில் ஏராளமாகப் பொருளுதவி செய்தனர். டிராபல்கர்ஸ்குயரில் 67 முறை ஜெர்மனியில் குண்டு வீசிய ஓர் விமானத்தை ஜனங்கள் கண்டு களிக்கின்றனர்.







பிரிட்டிஷ் விமானப் படையைச் சேர்ந்தோர் குண்டு வீசப் புறப்படுமுன் தக்க ஏற்பாடுகளைச் செய்து கொள்கின்றனர். 1941-ம் ஆண்டு பிப்ரவரியில் ஆரம்பித்த இந்த விமானப் பயிற்சி கோஷ்டியில் இப்போது 250,000 பேர்கள் சேர்ந்திருக்கின்றனர்.

**அட்டைப் படம்**



மஹாபலிபுரத்தில் ஓர் காட்சி

